# கல்கி

KALKI 26-2-84 ரூ 1-20



தமிழகத்துக்கு

# எந்த பட்ஜெட் நல்ல பட்ஜெட்?

ரவி-

சற்றே
நெருங்கி
உற்றுப்
பாருங்கள்






புதிய
ஸூப்பர் ரின்

கண்கவரும் புதிய மேலுறை!
புதுமை கமழும் நறுமணம்!

**ஸூப்பர் ரின்**
**அதிக வெளுப்பொளி பாய்ச்சுது-**

இதற்கு ஈடுநிற்க டிடர்ஜெண்ட் வில்லை எதுவுமே இல்லை!

---

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RIN 75 2013 TM

அறிமுகம்

# ருஷ்ய அதிபர்



**சோ**வியத் கம்யூனிஸ்ட் கட்சியின் புதிய பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார் கான்ஸ்டான்டின் செர்னென்கோ. கட்சிப் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறவரே பின்னர் நாட்டின் ஜனாதிபதியாவது ருஷ்யாவில் வழக்கத்தில் உள்ளது.

செர்னென்கோவுக்கு வயது எழுபத்திரண்டு. இவர் பிரஷ்னேவின் ஆபீஸ் மானேஜராகத்தான் இருந்தார். படிப்படியாக உயர்ந்து இன்று சோவியத் அதிபராகி விட்டார்.

பிரஷ்னேவ் இறந்த உடனேயே இவர் அதிபராவார் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் ஆண்ட்ரபோவ் தமது வலிமையை நிரூபித்தபோது செர்னென்கோ பதுங்கி இப்போது பாய்ந்து பதவியில் அமர்ந்திருக்கிறார்.

சோவியத்நாட்டின் அதிபராகப்பதவி ஏற்றுள்ளவர்களிலேயே அதிக வயதானவர் செர்னென்கோதான். இந்த ஒரு விஷயத்திலேனும் இவருக்கும் அமெரிக்க அதிபர் ரேகனுக்கும் ஒற்றுமை இருப்பது கண்டு நாம் மகிழலாம்!

செர்னென்கோ மிகச் சிறந்த நிர்வாகி என்று பெயர் பெற்றவர். பிரஷ்னேவின் ஆத்மார்த்த சீடராய் இருந்து அரசியல் நுணுக்கங்களைக் கற்றறிந்தவர்.

அரசியலுக்கு வருமுன் பண்ணை நிலத்தில் தினக் கூலிக்கு வேலை பார்த்த செர்னென்கோ பிறந்தது 1911, செப்டம்பர் 24–ம் தேதி.

கிராமத்தின் கொள்கைப்பரப்பு செயலராக அரசியல் வாழ்க்கையை ஆரம்பித்தார். கொஞ்சம் கொஞ்சமாகப் பல்வேறு பதவிகளில் உயர்ந்தவர், 1956–ம் ஆண்டில் 'அஜிடேட்டர்' என்ற பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பேற்று நடத்தியிருக்கிறார்.

'சோஷலிஸ உழைப்பாளர்களின் ஹீரோ' என்று இருமுறை தேர்ந்தெடுக்கப்பட்ட செர்னென்கோ வேறு பல விருதுகளையும் பரிசுகளையும் பெற்றுள்ளார்.

பிரஷ்னேவ் தமது வாரிசு எனக் கருதி உருவாக்கியது இவரைத்தான்: வாரிசு, ஆட்சி பீடத்தை அலங்கரிக்கச் சற்றுத் தாமதமானாலும் வாய்ப்பைத் தவறவிடவில்லை. பொறுத்திருந்து பூமி ஆள்கிறார்!

–சலன்

**கோகுலம்** மார்ச் '84

பாக்கியவான் போளாஜி வண்ணப் படக்கதை

–ஆனந்தி

சித்திரம்: வினு

★ வீரம் காட்டினர், விருது பெற்றனர்!

★ தங்கநதியின் அரசன்

கோகுலம், கிண்டி, சென்னை-32.

# டில்லிக்கு டாடா...

**‘கருத’**




**டி**ல்லியில் சில பள்ளிக் கூடங்களில் அட்மிஷன் வாங்க வேண்டுமென்றால் ஏகப்பட்ட சிபாரிசு தேவைப் படும். சம்பளமும் கொஞ்ச நஞ்சமல்ல. (பெற்றோரின் மாத வருவாயைக் கேட்டு விட்டுத்தான் அட்மிஷன் ஃபாரமே கொடுப்பார்கள்.) இதுமாதிரி பள்ளிகளில் ஸ்கூல் விடும் நேரத்தில், நூறு கார், இருபது முப்பது பஸ்கள் வெளியே நின்று கொண்டிருக்கும். ‘ஏழை’ ரகப் பள்ளியில் தமிழர் பள்ளி களைச் சேர்க்கலாம். ஆறு பள்ளிக்கூடங்களை நடத்து கிறார்கள். சம்பள விகிதம் மிகவும் சாதாரணம். அத னால் பார்க்கப் பரிதாபமாக இருக்கும். டில்லியில் எவ் வளவோ தமிழர் சங்கங்கள் எவ்வளவோ நிதி திரட்டு கின்றன. முக்கியமான கல்விப் பணிக்குத் தான் பணம் சேர மாட்டேன் என் கிறது.

● ● ●

டில்லியில் 21 வரு டங்கள் இருந்ததால் ஏற் பட்ட பழக்கங்களில் சில வற்றை அவசர அவசரமாக மாற்றிக் கொள்ள முயற்சி க்கிறேன். முக்கியமானது. காய்கறிக் கடைகளில் பொறுக்கி எடுப்பது. மரி யாதையே இல்லாமல், ஏதோ காய்கறித் திருடர் களாக நம்மைப் பாவித்து, "ஏய்யா, கையை வெக் கறே... எடய்யா" என்று

பேசுகிறார்கள். (டெல்லியில் பொறுக்கிக் கொடுத்தால் தாம் எடைபோடுவார்கள்) தமிழர் பண்பாடு, இமயத் தில் கொடி நாட்டினோம் என்றெல்லாம் நமக்கு நாமே முதுகைச் சொறிந்து கொண்டு நம்மை ஏமாற்றிக் கொண்டிருக்கிறோம். என்ன பலன்? மரியாதைகொடுக்கத் தெரியாதவர்கள் தான் நிறைய பேர் இங்கு இருக்கிறார்கள்.

● ● ●

ஊர்வலங்கள் இல்லாத நாட்களே கிடையாது. அரசியல் கட்சிகளுக்கு ஆதா ரமே ஊர்வலங்கள் தான். ஆனால் டில்லியில் ஊர் வலங்கள் போனால், பொது வாக யாருக்கும் தொல்லை இராது. அப்படி ஒரு பாதையில் ஊர்வலம் செல்வதற்குத் தான் போலீஸ் லைசென்ஸ் தரு கிறார்கள். சென்னை நக ரிலும் இப்படிச் செய்ய லாம். அனுபவத்திற்குப் பிறகு தோன்றிய யோசனை.)

● ● ●

ட. வி. காரர்களுக்கு ஒரு கேள்வி. சென்னை ட. வி. நிலையத்தில் இரண்டு பேர் நியூஸ் எடிட்டரா கவோ என்னவோ பதவி ஏற்றதைச் செய்தியில் கூற வேண்டிய அவசியம் என்ன? இது எப்படி நியூஸ் ஆகும்? செய்தியை எழுதுபவர்கள் தங்கள் பெயருக்கு விளம் பரம் தேடிக் கொள்ளலாம். தவறில்லை. ஆனால் ட.வி. யின் விலை மதிக்க முடியாத நேரத்தில் சில செகண்டு களை ஒ. பி.யில் சுவீகரித்துக் கொள்வது சரியா?

● ● ●

டில்லியில் நிர்வாகம் செய் வது மெட்ரோபாலிடன் கவுன்சில். இது அசெம்பி ளிக்குக் கீழே; கார்ப்பரேஷ னுக்கு மேலே. அமைச் சர்கள் கிடையாது; ஆனால் எக்ஸிகியூடிவ் கவுன்சிலர்கள் உண்டு. (இவர்கள் மந்திரி மாதிரிதான்) இவர்கள் இருக்கும் இடமே தெரி யாதபடி செய்து விடுபவர் லெப்டினென்ட் கவர்னர் ஜக்மோகன். சுறுசுறுப் பானவர். முடிவுகளை விரை வாக எடுப்பதில் மன்னர். ஒரு காலத்தில் சஞ்சய் காந்தியின் ஆள் என்று கருதப்பட்டவர். ஷா கமிஷ னில் இவரைக் குடைந்து எடுத்து விட்டார்கள். உண் மையில் டில்லியில் ஜக் மோகன் செய்யும் பணி பாராட்டுக்கு உரியது. நம் ஊரில் இலாகா இல் லாத அமைச்சர் ஒருவரை நியமித்து, அவ்வப்போது அவசரமாகக் கவனித்துச் செயல்பட வேண்டியவேலை களைத் தரலாம். உதா ரணம்: வெள்ளநிவாரணம்.





## தமிழகத்துக்கு

# எந்த பட்ஜெட் நல்ல பட்ஜெட்?

அமைச்சர் நெடுஞ்செழியன் எந்த விதமான பட்ஜெட் சமர்ப்பிக்கப் போகிறாரோ நமக்குத் தெரியாது. ஆனால் எந்த விதமான பட்ஜெட் நல்ல பட்ஜெட் என்பதை அறிஞர்களைக் கேட்டறிந்து சொல்லமுடியும்....

தமிழகத்தில், பொருளாதார மாற்றத்தையும், தொழில் வளர்ச்சியையும் ஏற்படுத்தக் கூடிய ஒரு முன்மாதிரியான வரவு செலவு திட்டத்தைத் தயாரித்துத் தர முடியுமா என்று, அரசாங்க நிதித் துறையில் முக்கிய பொறுப்பில் இருந்து வெளியேறிய, ஒரு பொருளாதார வல்லுனரைக் கேட்டோம். அவர் சொன்னார்: ''நீங்கள் கேட்பது மாதிரி ஒருசிறந்த அல்லது லட்சிய பட்ஜெட்டைத் தயாரித்துக் கொடுப்பது மிகவும் கடினமான ஒன்று: ஏனென்றால் ஏற்கெனவே ஆட்சியிலிருந்தவர்கள் ஒப்புக் கொண்ட செலவுகளையும் கணக்கில் வைத்து பட்ஜெட் தயாரிக்கப்படுகிறது: ஆனால், வீணான செலவினங்களைக் கட்டுப்படுத்தி, மாநில அபிவிருத்திக்கான நல்ல பல திட்டங்களுக்குப் பணத்தைத்திருப்பலாம். இப்படிப் பணத்தை சிக்கனப் படுத்துவதன்மூலம் வரிவிதிப்பை ஓரளவு குறைக்கவும், மக்களுடைய பணத்தை நியாயமான முறையில் செலவிடவும் சாத்தியங்கள் இருக்கின்றன.''

''எந்தெந்த வழிமுறைகளில் சிக்கனத்தைக் கடைப்பிடித்து, பணத்தைச் சேமிக்கலாம்?'' என்று கேட்டதற்கு, பல்வேறு வழிகளைக் கூறினார் அந்த நிபுணர். அந்த வழிகளைத் துணிவாக அரசு கையாண்டால் ஆளும் கட்சியின்மீது பலருக்கு அதிருப்தி ஏற்படுவது சாத்தியமே. ஆனால் நீண்ட கால நோக்கில் மக்கள் நன்மையை உத்தேசித்து அரசு செயல்படுமானால் எதிர்கால விளைவுகள் மிகவும் போற்றத்தக்கதாக இருக்கும்.

**சிக்கனத்தைக் கையாள சில வழிகள்:**

- தமிழகத்தைப் பொறுத்த வரை மக்கள் தொகைக்கு ஏற்ப அரசு ஊழியர்கள் இல்லை. மிகவும் அதிகமாக இருக்கிறார்கள். ஊழியர்களைக் குறைக்க வேண்டும். கிட்டத்தட்ட 8 லட்சம் நபர்கள் நேரிடையாகவோ அல்லது, மறைமுகமாகவோ, அரசுப் பணிகளில் இருக்கிறார்கள். ஒவ்வொரு வருடமும், 3 முதல் 5 சதவீதம் வரை ஓய்வு பெறுகிறார்கள். அந்தக் காலியிடங்களை நிறைவு செய்யாமல் இருந்தாலே ஆண்டொன்றுக்குக் கிட்டத்தட்ட 25 கோடி சேமிக்கலாம்.

- இந்த நவீன காலத்தில், ஒவ்வொருவரும் அவரவர் கடமையை அவரவர்களே செய்து கொள்ள வேண்டும். அதிகாரிகளுக்கு ஒன்று, இரண்டு கடைநிலை ஊழியர்கள் இருக்கிறார்கள். இவர்கள் வேலை அதிகாரிகளின் அறை வாசலில் உட்கார்ந்து கொண்டு, வம்பளந்து கொண்டிருப்பது, அல்லது பார்க்க வருபவர்களைத் தடுப்பது. இன்றைய சூழ்நிலையில் அதிகாரிகளுக்குக் கடைநிலை ஊழியர்கள் தேவைதானா என்பதைச் சிந்திக்க வேண்டும்.

- ஒவ்வொரு புதிய திட்டத்தை அரசு அறிவிக்கும் போதும் அதற்குப் புதிய ஊழியர்களையும் அரசு நியமிக்கிறது. ஆனால் அந்தத் திட்டம் பூர்த்தியானவுடன் தேவையில்லா விட்டாலும், அவர்கள் வேறு துறைகளுக்கு அனுப்பப்படுகிறார்களே தவிர, வெளியே அனுப்பப்படுவதில்லை. இதனால் செலவு அதிகரிக்கிறது.

- எக்கச்சக்கமான ஆட்கள் உள்ள ஒரு துறை மின்சார வாரியம். கிராமப்புற மின் வசதித் திட்டம் முடிந்த பிறகு கூட, அதற்கு எடுக்கப்பட்ட ஆட்கள் தொடர்ந்து வேலை செய்து கொண்டிருக்கிறார்கள்.

- ஒவ்வொரு வேலைக்கும் ஒரு நபரைத் தேர்ந்தெடுப்பதற்குப் பதிலாக, பலதரப்பட்ட வேலைகளைச் செய்யத் தயாராக இருக்கும் ஒருவரைப் பணியில் அமர்த்தினால் செலவுகள் குறையும்.

- அரசு வாகனங்களையும் அவற்றில் பயன்படுத்தப்படும் பெட்ரோலின் அளவையும் குறைத்தாலே— இதற்கு விதிமுறைகளைக் கண்டிப்புடன் பின்பற்றினாலே போதும்— ஏகப்பட்ட பணம் மிச்சமாகும்.

• மருத்துவமனைகளில், மருந்துகள் வீணாகின்றன. களவு போகின்றன. இவையிரண்டையும் தடுத்து நிறுத்தினால், செலவுகள் குறையும்!

• அரசும், மற்றப் பொதுத் துறை நிறுவனங்களும் செலவழிக்கும் பணத்தைப் பற்றி விசாரிக்க ஒரு கமிஷன் நியமிக்க வேண்டும். செலவுகளைக் குறைக்க கமிஷன் வழிகள் [illegible], அந்த யோசனைகளைக் கண்டிப்புடன் அமல்படுத்த வேண்டும்.

• நிறைய பொதுத்துறை நிறுவனங்கள் நஷ்டத்தில் இயங்கிக் கொண்டிருக்கின்றன. இவை லாபத்தில் நடக்க ஏற்பாடுகள் கவனிக்க வேண்டும்; அல்லது மூடிவிட வேண்டும்.

• அரசு கட்டடங்கள் கட்டும் போது நிறையப் பணம் வீணாகச் செலவாகிறது. திட்டமிட்டபடி வேலைகளை முடிக்க வேண்டும். கட்டப்படும் கட்டிடங்களுக்கு காண்டிராக்டர் குறைந்த பட்சம் இருபது வருடம் உத்தரவாதம் தர வேண்டும். கட்டிடங்களுக்கான வரைவுகள் (designs) அளவுக்கு மீறிப் போடப்படுகின்றன. இதைத் தவிர்க்கலாம்.

### அமெரிக்காவில்

• இனி அமெரிக்காவில் உள்ள மாநிலங்களில் பட்ஜெட் தயாரிக்க மேற்கொள்ளப்படும் முறையைத் தெரிந்து கொள்ளலாமா? இதற்குப் பெயர் குறைந்த அடிப்படை வரவு செலவுத் திட்டம். (Zero base budget) ஏற்கெனவே அரசு அறிவித்துள்ள திட்டங்களை மறு பரிசீலனை செய்தும் அது தேவைதானா என்பதைக் கண்டறிந்தும் போடப்படுகிற பட்ஜெட் இது. முக்கியமில்லாத துறைகளுக்குப் பணம் ஒதுக்கப்பட்டிருந்தால் அவை கண்டு பிடிக்கப்பட்டு, பல அவசியத் திட்டங்களுக்குப் பணத்தைத் திருப்பலாம். உதாரணமாக தமிழக அரசு, கிருஷ்ணாநதி நீர்த் திட்டத்துக்கு இந்த முறையில் பணம் சேர்க்கலாம். இவ்வித பட்ஜெட்டின் மற்றொரு சிறப்பு அம்சம்: ஒவ்வொரு திட்டத்துக்கும் கோரப்படும் பணம் சரியானது தானா என்பதைக் கண்டறிந்து குறைப்பது. இதன் மூலம் அனாவசிய வரிவிதிப்பைத் தவிர்க்கலாம். எக்கச்சக்கமாக ஒரு திட்டத்துக்குப் பணத்தை ஒதுக்கி விட்டு, அரசியல்வாதிகளும் அரசு ஊழியர்களும் அதில் கொள்ளையடிப்பதைத் தடுக்க இந்த முறை உதவும்.

### பட்ஜெட்டில் பணம் ஒதுக்குவது எப்படி?

ஒரு அதிகாரியின் விருப்பத்துக்கு ஏற்பத் திட்டங்களுக்குப் பணம் ஒதுக்குதல் கூடாது. விஞ்ஞானபூர்வமாக, ஆராயப்பட்டு திட்டங்களுக்குப் பணம் ஒதுக்கப்பட வேண்டும். மார்ச் மாதம் பட்ஜெட் வெளி வருகிறதென்றால், டிஸம்பர் மாதமே, மாவட்ட

---

## தமிழகம்

**[கடந்த பல வருடங்களாகத் தமிழகத்தில் தொழில் வளர்ச்சி முடங்கிக் கிடக்கிறது. என்ன காரணம்? பட்ஜெட்டில் தொழில் வளர்ச்சிக்கு என்ன செய்யலாம்? தொழிலதிபர் சித்ரா நாராயணஸ்வாமி சொல்கிறார்.]**

''ஆட்சியாளர்களுக்கு ஒரு தொலைநோக்குத் தன்மையும், ஊக்கமும், இல்லாதது தான் வளர்ச்சி முடங்கியதற்குக் காரணம். எதிர்க் கட்சித் தலைவரையே மனத்தில் கொண்டு செயல்படுவதினால் மாநிலத்திற்கு என்ன நன்மைகள் செய்யலாம் என்ற எண்ணமே ஏற்படுவதில்லை. மாநிலத்தைப் பொறுத்த வரை தொழில் வளர்ச்சிக்கு மாநில அரசால் செய்யப்பட வேண்டியவை நிலம் கொடுப்பது, மின்சார வசதி கொடுப்பது, தண்ணீர் வசதி செய்து தருவது, போன்றவை தாம். மற்றபடி, லைசென்ஸ் வழங்குவது, இயந்திரங்களை இறக்குமதி செய்ய அனுமதிப்பது முதலியன மத்திய அரசின் வேலை. ஆனால் இவற்றைப் பெற மாநில அரசின் ஊக்கமும், உதவியும் தேவை. மத்திய ஆளும் கட்சியை அரசியல் ரீதியான காரியங்களுக்கு வேண்டிக் கொள்கிறார்களே தவிர மாநிலத்தின் நன்மைகளைக் கருதி அவர்களிடம் பேசுவதில்லை. மின் உற்பத்திக்கும் தொழில் வளர்ச்சிக்கும் முக்கிய தேவை நிலக்கரி. எந்த இடத்திலிருந்து தருவிக்கப்பட்டு எங்கு பயன்படுத்தப்பட்டாலும் விலை சரிசமமாக இருப்பதாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். தமிழகத்தில் எப்போதுமே மின் வசதி ஏறக் குறையத்தான் இருந்து வருகிறது. சமீபத்தில் மேட்டூரில் ஒரு தொழிற்சாலை அமைக்க மின்சாரம் கேட்டபோது, சிரமம் என்று சொல்லப்பட்டதால், இப்போது அந்தத் தொழிற்சாலை ஆந்திராவுக்குச் சென்று விட்டது. தொழிற்சாலைகளுக்கு மின்சாரக் கட்டணச் சலுகை கொடுப்பது, விற்பனை வரியைக் குறைப்பது போன்ற செயல்கள் தொழில் வளர்ச்சிக்கு மிகவும் உதவும். தொழிற்சாலைகள் நிறையத் தோன்றுவதன் மூலம் தான் உற்பத்தியைப்

ஆட்சியாளர், தமக்குக் கீழ் உள்ள அதிகாரிகள், கிராமத் தலைவர்களுடன் பேசி, அபிவிருத்தித் திட்டங்கள், அவற்றுக்கான செலவுகளைப் பட்டியலிட்டு அனுப்ப வேண்டும். பிறகு அதைத் தலைமைச் செயலகத்தில் உள்ள அதிகாரிகள் விவாதித்துச் செலவினங்களை வகைப்படுத்த வேண்டும். இன்னொரு முக்கியமான விஷயம்: செலவை அனுமதிப்பதோடு நில்லாது முறையாகச் செலவிடப்பட்டதா என்று பார்க்கவும் வேண்டும்.

தமிழ்நாட்டில், கடந்த பல ஆண்டுகளாகப் பஞ்சாயத்துத் தேர்தல் நடைபெறாததால், கிராம அளவில் செயல்படுத்தப்படும் திட்டங்களுக்கு ஒதுக்கப்படும் பணம் முறையாகச் செலவிடப்படுகிறதா என்பதைக்கண்டறியும் வாய்ப்பு குறைந்து விட்டது. ஜனநாயகம் அதனுடைய அடிப்படைத் தன்மையை இழந்து கொண்டிருக்கிறது. அரசின் திட்டங்களுக்கும், கிராமத்திலுள்ள மக்களுக்கும் முற்றிலும் தொடர்பில்லாமல் போய்க் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு கிராமத்திலும், தன்னிறைவுத் திட்டத்தையோ அல்லது வேறு திட்டத்தையோ நிறைவேற்ற அந்தப் பகுதி மக்களையே பயன் படுத்திக் கொண்டால் மக்களுக்கு உற்சாகம் இருக்கும். சில சமயங்களில் மக்களே பணத்தைக்கொடுத்து திட்டத்தை நிறைவேற்றச் சொல்லும் வாய்ப்பும் உண்டு. அந்தந்த பகுதிகளுக்குத் தேவையான பணத்தை ஆங்காங்கே உள்ள உள்ளாட்சி அமைப்புகள் தேடிக்கொண்டால், மாநில அளவில், செலவைக் கட்டுப்படுத்த முடியும்.

### வருமானமே இல்லாத செலவினங்கள்

இதற்குத் தற்போது சரியான உதாரணம் கூற வேண்டுமென்றால் சத்துணவுத் திட்டத்தைக் குறிப்பிடலாம். சமுதாய நோக்கில் பார்க்கும் போது, இது மிகச் சிறந்த திட்டமாகத் தோன்றினாலும், அரசின் வருமானத்தில் பத்து சதவீதத்தை முழுங்கி விடுகிறது. ஊழல்களுக்கும் வீணான செலவுகளுக்கும் வழி செய்கிறது. யாருக்காக இந்தத் திட்டம் செயல்படுத்தப்படுகிறதோ அவர்கள் இதனால் நிறைவான பயன் அடைவதில்லை. பள்ளிகளுக்குச் செல்லும் வரை தான் குழந்தைகளுக்குச் சத்துணவு என்று கொண்டு வந்தால், திட்டத்தை நடைமுறைப் படுத்த சுலபமாக இருக்கும். இந்தத் திட்டத்தைச் செயல்படுத்தும் பொறுப்பைப் பஞ்சாயத்துகளிடம் ஒப்படைத்து விட வேண்டும். உள்ளூரில் ஒருவருக்கொருவர் தெரிந்த முகமாக இருக்குமேயானால் ஊழல்கள் செய்ய வாய்ப்புக்கள் குறைவு. பெற்றோரும் தட்டிக் கேட்கத் துணிவு பெறுவர்.

-நமது நிருபர்.

மேலட்டை வண்ணப்படம்: சுபா

## தவறிவிட்டது

போக்க முடியும்; இறக்குமதியைக் குறைக்க முடியும்; தேசத்தின் பொருளாதாரம் வளம் பெற முடியும். மக்களுக்கு வேலை வாய்ப்புக்கள் அதிகமாகும். சத்துணவு போன்ற திட்டங்கள் நல்ல திட்டங்களாக இருந்தாலும் வேலை கொடுத்துச் சோறு போடுவது தான் சிறந்த எதிர்காலத் தலைமுறையை ஏற்படுத்தும். இதன் மூலம் உழைப்பின் பெருமையை உணர்த்த இயலும்.

அரசு அலுவலர்களை அடிக்கடி இட மாற்றம் செய்யக் கூடாது. ஆடம்பர விழாக்கள் கூடாது. மந்திரிகளின் சுற்றுப் பயணங்கள் கட்டுப்படுத்தப் படவேண்டும். விடுமுறை நாட்களைக் குறைக்க வேண்டும். கடந்த பதினைந்து ஆண்டுகளில் பணவீக்கம் ஆயிரம் மடங்கு அதிகமாகி விட்டது. பொருட்களின் விலைக்கும், மக்களின் வாங்கும் சக்திக்கும் நிறைய இடைவெளி இருக்கிறது. இதைக் குறைத்தால் தான் உண்மையான பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று பொருள்.



குஜராத்தும், ஆந்திராவும் தொழில் வசதிகள் பெருகச் செய்யும் வழிமுறைகளைப் பார்த்தாவது தமிழக அரசு கற்றுக் கொள்ள வேண்டும்.

எதற்கெடுத்தாலும் மத்திய அரசைக் குறை கூறிக் கொண்டு இருக்கக்கூடாது. புதிய தொழிற்சாலைகள் அமைக்கத் தாமதம் ஆனாலும், இருக்கின்ற தொழிற்சாலைகளை விரிவு படுத்தவேனும் அனுமதி தர வேண்டும். இப்போது ஆட்சியிலுள்ளவர்கள் தொழிலதிபர்களுக்குச் சாதகமாகவும் இல்லை; தொழிலாளர்களுக்குச் சாதகமாகவும் இல்லை. பொருளாதார வளர்ச்சியைப் பற்றி நினைத்தே பார்ப்பதில்லை.

அடேங்கப்பா!.. ஒரே பிரசவத்தில் எட்டு குழந்தைகளா? ..

நீங்க ஒண்ணு.. இதோட நிக்கும்னு தோணலே!

எட்டு புது மாவட்டங்கள்












கல்கி



1984 பிப்ரவரி 26
ருத்ரோத்காரி மாசி 14
மலர் : 42 இதழ் : 30



# மாவட்ட சாதனை!

கைதட்டுங்கள், ஜோராய்க் கைதட்டுங்கள்! இதோ அ.தி.மு.க. ஆட்சியின் லேட்டஸ்ட் சாதனை: இமாலய சாதனை. சூ மந்திரக்காளி! இதோ பார்! புதிய மாவட்டங்கள்! ஒன்றல்ல, இரண்டல்ல எட்டு! இனி,

ஐ. ஏ. எஸ். அதிகாரிகள் பலர் எட்டு மாவட்டங்களில் எந்த மாவட்டத்தில் நம்மைக் கலெக்டராகப் போடுவார்கள் என்று எதிர்பார்த்துப் பகல் கனவு காணலாம். ஜீப் உற்பத்தியாளரும் விற்பனையாளரும் ஒரு மாவட்டத்துக்கு எட்டு முதல் எண்பது ஜீப் விதம் எட்டு மாவட்டத்துக்கு எத்தனை ஜீப்களைத் தமிழக அரசு தலையில் கட்டலாம் என்று கணக்குப் போடலாம். மாவட்டத் தலைநகர் என்று சிறப்புப் பெறப் போகிறதே நம் ஊர் என்று அந்தந்த ஊர் மக்கள் மனம் மகிழலாம். புதிய காரியாலயக் கட்டிடங்கள் எழும் என்பதால் காண்டிராக்டர்கள் களிப்படையலாம். புதிய கட்டிடங்கள் எழும்வரை நம் வீட்டை அதிக வாடகைக்கு விடலாம் என்று வீட்டுச் சொந்தக்காரர்கள் விம்மிதமடையலாம். காகித வியாபாரிகள், அச்சகத்தினர் புதிய எட்டு மாவட்டக் காரியாலயங்களுக்குப் பேப்பர் பென்சில் இத்தியாதி சப்ளை செய்ய இப்போது முதலே சுறுசுறுப்படையலாம். எட்டு கலெக்டர் காரியாலயங்களில் எத்தனை அதிகாரிகள், ஊழியர்கள் புதிதாக நியமனமாக வாய்ப்புண்டு என்று வேலையில்லாப் பட்டதாரிகள் கணக்குப் போட்டு அந்த வேலை நமக்குக் கிடைக்காவிட்டாலும் நம்மைப் போன்ற ஒருவருக்குத்தானே கிடைக்கும் என்று ஆறுதல் பெறலாம். ஆளும் கட்சி எதிர்க்கட்சிகளைச் சேர்ந்த வட்டங்களும் மாவட்டங்களும் இந்தப் புதிய ஏற்பாடுகளால் தங்களுக்குக் கிடைக்கப் போகிற ஆதாயங்கள் குறித்துக் கோட்டை கட்டி வேட்டையாடவும் தயாராகலாம்!

இப்படி ஒன்று இரண்டா எத்தனையோ அனுகூலங்களை அள்ளி வழங்கப் போகின்றன புதிய மாவட்டங்கள். தமிழா! நீ எவ்வளவு பெரிய பாக்கியசாலி! யோசித்துப் பார்! நீ இனிமேல் பெட்டிஷன் எழுதிக்கொண்டு தொலை தூரத்தில் உள்ள மாவட்டத் தலைநகருக்கு ரயிலில் பயணப்பட வேண்டாம். அருகிலேயே இருக்கும் புதிய தலைநகருக்குப் பஸ்ஸில் போகலாம். கலெக்டர் ஆபீஸில் மனுவைக் கொடுத்துவிட்டு அது அங்கே ஃபைல்களில் புகுந்து கொள்வதையும் செல்லரிக்காமலும் எலி கடித்துவிடாமலும் பாதுகாக்கப்படுவதையும் கண்டு ஆனந்தமடையலாம்.

தமிழா! புரிந்து கொள். சிறிய மாவட்டங்களாக இருந்தால் அவற்றை நிர்வகிப்பது எளிது என்பதற்காகத்தான் புதிய மாவட்டங்கள் தோன்றுகின்றன. அவ்வாறு தோன்றிய பிறகும் மளமளவென்று காரியங்கள் நடக்கவில்லையே மெத்தனப் போக்குத்தானே நிலவுகிறது என்று அசட்டுத்தனமாய் நீ கேட்கக் கூடாது. வட்டார அதிகாரிகளாக வருகிறவர்கள் எத்தனை அறிவாற்றல் உள்ளவர்களாய் இருந்துதான் என்ன பிரயோஜனம்? உனக்குத் தெரியாதா, புதுதில்லியின் பிடிவாதம் காரணமாக இங்கு மாநில சுயாட்சி கிடையாது; அதனால் மாவட்டச் சுயாட்சி இல்லை; எனவே, வட்டச் சுயாட்சியில் வறட்சி, ஆகவே பஞ்சாயத்து சுயாட்சிக்கும் பஞ்சம். என்றாலும் சிறிய மாவட்டங்களை நிர்வகிப்பது எளிது என்பதால்தான் புதிய மாவட்டங்கள் தோன்றுகின்றன என்ற கருத்தில் தவறில்லையாதலால் பூரிக்கிறோம்.

இத்தனை சந்தோஷத்துக்கிடையில் டாக்டர் சந்தோஷம் மட்டும், ராஜாஜி பெயர் எந்த மாவட்டத்துக்கும் வைக்கப்படவில்லையே என்று தம் பெயருக்குப் பொருந்தாத விதத்தில் துக்கம் கொண்டாடிக் கொண்டிருக்கிறார். அவருக்குத் தெரியாதா, ராஜாஜி பெயரைக் கேட்டாலே லஞ்ச ஊழல் பேய்க்குப் பயம் பற்றிக் கொள்ளும் என்று! இப்போது எல்லோருடனும் சேர்ந்து அதுவும் ஆனந்தக் கூத்தாடுவதைக் காண எவ்வளவு நிம்மதியாக, திருப்தியாக இருக்கிறது!

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# அபிமானவல்லி

## கி.ராஜேந்திரன்

### அத்தியாயம் 17

### வெற்றித் திலகம்

மதிய உணவுக்குப் பிறகு சற்று ஓய்வெடுத்துக் கொண்ட கடம்பமாதேவி விழித்தெழுந்தபோது தான் அமிழ்ந்து நீராட வசதியாகப் பளிங்குச் செய்குளத்தில் தெளிந்த நீர் நிறைந்திருப்பதையும் உடலில் வாசனைப் பொடி தேய்த்து விடவும் ஈரத்தை ஒற்றி எடுத்துப் புத்தாடை புனைய உதவவும் சேடிகள் காத்திருப்பதையும் கண்டாள். நிதானமாக நீராடி முடித்துப் புத்துணர்ச்சியுடன் விளங்கிய அவள், உடை அலங்காரத்துக்கும் முக ஒப்பனைக்கும் ஆபரணங்கள் பூணவும் மேலும் சற்று நேரம் எடுத்துக் கொண்டாள். இதற்குள் துளசியும் மருக்கொழுந்தும் இடையிடையே வைத்துக் கட்டிய கதம்பமலர் மாலை ஒன்றினை எடுத்து வந்தாள் சேடி. ''இதை அணிந்து கொண்டு தோட்டத்தில் உலாவலாம் என்பது மகாராணியாரின் யோசனை'' என்றாள். ''மாலைப் பொழுது அங்கே மனோரம்யமாய் இருக்கும்.''

''எவ்வளவு முன் யோசனை உங்கள் மகாராணிக்கு! விருந்தோம்பல் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்?'' என்று மகிழ்ந்த கடம்பமாதேவி மாலையைச் சூடிக் கொண்டு நிமிர்ந்தெழுந்த நெஞ்சகங்கள் மீதாகத் தவழச் செய்தாள்.

அரண்மனையையொட்டியிருந்த மிகப் பரந்து விரிந்த உத்தியானவனத்தை அவள் அடையும் வரை வழிகாட்டி உடன் வந்த சேடிகள் அதன் பின்னர் மரியாதையுடன் பின் தங்கி மறைந்தனர். அவர்கள் அப்படிக் காணாமற் போனதைக் கூடக் கவனிக்க இயலாதபடி அந்தப் பூங்காவின் எழில் கடம்பமாதேவியைக் கவர்ந்திருந்தது. இங்கொன்றும் அங்கொன்றுமாய் நின்ற மிகப் பெரிய மரங்களின் அடிவாரத்தில் நடந்து களைக்கும் போது இளைப்பாற மேடைகள் போடப்பட்டிருந்தன. அம்மரங்களின் நிழல் விழாத பகுதிகளையெல்லாம் வட்டங்களாகவும் சதுரங்களாகவும் நடைபாதைகள் கோடிட்டுப் பிரித்தன. ஒவ்வொரு பிரிவிலும் பசும் புல்லின் இடைஇடையே பாத்தி கட்டிப் பல்வேறு வகையான வண்ண மலர்ச் செடிகள் பயிரிடப்பட்டுப் பூத்துக் குலுங்கின. அவற்றின் அழகினை ரசித்தபடியே நடந்த அவளும் தலையிலும் கழுத்திலும் கரங்களிலும் சூடியிருந்த பூச்சரங்கள், மலர் மாலைகள் காரணமாக ஒரு நடமாடும் நந்தவனமாகவே திகழ்ந்தாள்.

ஒரு திருப்பத்தில், அதுவரை அவள் பார்வையிலிருந்து மறைந்திருந்த ஒரு மரத்தடி மேடை தென்பட்டது. அதில் அமர்ந்திருப்பது குலாந்தகன் என்று உணரவும் சட்டென்று பொன் சொரிவது போல் பூச்சொரிந்த ஒரு கொன்றை மரத்துக்குப் பின் தன்னை ஒளித்துக் கொண்டாள். சதங்கைகளைக் கழற்றி ஓசை எழாதவண்ணம் கைகளில் இறுகப்பற்றிக் கொண்டு விளையாட்டுத்தனமாக மரத்தின் பின்னாலிருந்து பூச்செடிகளின் மறைவுக்கும் அங்கிருந்து ஒரு புதரின் பின்னாலும் பூனை போல் தாவி ஓடினாள். நடைபாதையின் எல்லையைக் கடந்து நடப்பது நந்தவனத்துக்கு நல்ல இல்லை என்பதை உணர்ந்தும் சில சமயங்களில் இயல்பாக ஏற்படுகிற குழந்தைத்தனமான குறும்புடன் துள்ளிச் சென்று குலாந்தகன் அமர்ந்திருந்த மரத்தடிமேடையின் பின்புறத்தைச் சுற்றி வளைத்து அடைந்தாள். அடி உதட்டை உள்ளுக் கிழுத்து ஒருகணம் யோசித்தவள் குரலை மாற்றிக் கொண்டு அடித்தொண்டையில் பேசினாள்: ''யாரப்பா அது? என்ன யோசனை? கவலை காதலைப் பற்றியதா? அல்லது போரைப் பற்றியதா?''

திடுக்கிட்டு எழுந்த குலாந்தகன் அந்த இயக்கத்துடனேயே சரேலென்று திரும்பி வாள் மீது கைவைத்து ''யார் அது?'' என்று அதட்டினான்.

''நான்தான் இந்த மரத்தின் தேவதை!'' என்றாள்.

''கடம்பமாதேவி!'' என்று இதற்குள் அடையாளம் தெரிந்து கொண்டவனாகச் செல்லமாகச் சண்டித்து அழைத்த அவன் அதே நேரத்தில் மரத்தின் பின்னால் கையைக் கொண்டு சென்று அவளை இப்பால் இழுத்தான்.

மேகத்திரையிலிருந்து படிப்படியாகத்தான் சந்திரன் வெளிப்படுவான். தாமரை மெல்ல மெல்லத்தான் மடலவிழும். சூரியனும் சிறிது சிறிதாகத் தான் உதயமாவான். இங்கோ கடம்பமாதேவியின் எழில் பளீரென்று ஒளிரும் மின்னல்போலத் தோன்றி மறையாமல் நிலைத்தது. சரேலென்று உருவப்பட்ட வாள் போலப் பளபளத்ததுடன் அவனைத் தாக்கித் தடுமாறவும் வைத்தது. இதமான மாலைப் பொழுதுக்கு ஏற்ற

விதமாக அவள் உடல் முழுவதும் மலர் அலங்காரமும் அதிலிருந்து கிளம்பிய மணமுமாகச் சேர்ந்து அவனைத் திக்குமுக்காடச் செய்தன. அள்ளிக் கொள்ள அந்த மலர்க்குவியல் தூண்டிய போதிலும் துணியாமல் விழிகளால் மட்டும் விழுங்கினான்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?''

''வேறு எப்படிப் பார்ப்பது? இன்று முற்பகலில் நீங்கள் ஆலோசனை மண்டபத்தில் போர் விளையாட்டு நடத்தியதற்கும் இப்போது குழந்தைத்தனமாக விளையாடுவதற்கும் எவ்வளவு வித்தியாசம்!''

''அது ஆலோசனை மண்டபம். இது நந்தவனம். அங்கே கவலைப்பட வேண்டும்தான். இங்குமா?''

''கவலைகள் ஒன்று இரண்டா? என் வாழ்க்கையே கவலை மயமானதாகி விட்டது'' என்றான் சோர்வுடன்.

''நான் அப்படிக் கருதவில்லை'' என்றாள் கடம்பமாதேவி. ''களிப்பும் கவலையும் நம் உள்ளத்தின்பாற்பட்டது. உள்ளம் நம் ஆளுகையின் கீழிருந்தால் வாழ்க்கையில் கவலை, களிப்பு இரண்டுக்குமே உரிய இடமுண்டு. நியாயமாக இப்போது நீங்கள் ஆனந்தத்தில் மிதந்து கொண்டிருக்கவேண்டும். மன்னர் உங்களை ஏற்றுக்கொண்டு விட்டாரல்லவா? உங்கள் திட்டம் இத்தனை எளிதாக நிறைவேறி விட்டதல்லவா?''

''மெய்தான் நான் குதூகலிக்கத்தான் வேண்டும்'' என்றான்.

சிரித்தான். ''குதூகலம் என்ற சொல்லை இதைவிடத் துக்ககரமாக வேறு யாராலும் உச்சரிக்க முடியாது!''

இப்போது அவனுக்கும் சிரிப்பு வந்து விட்டது. என்றாலும் அந்த நகைப்பிலும் துயரம் இழையோடியது.

''வீரத்தின் வெற்றி அளிக்கும் மகிழ்ச்சியைக் காதலில் ஏற்பட்ட ஏமாற்றம் விழுங்கி விடுகிறதாக்கும்!'' என்றாள்.

பையன்: அப்பா! நீங்க தப்பாக் கணக்கு சொல்லிக் கொடுத்ததால் ஆசிரியரிடம் அடி வாங்கினேன்!

தந்தை: 'அடி' என்று சொல்லாதே! மீட்டர் என்று சொல்லு...!

—எஸ். மாரியப்பன்.



அவன் மௌனமாய் வேறுபுறம் திரும்பினான்.

''கவனித்தேன்'' என்றான்.

''எதை?''

''அபிமானவல்லி நடனமாடுகையில் உங்கள் முகம் வெளிறியதை. உதடு துடித்ததை. கரங்களின் நடுக்கத்தைத் தவிர்க்க நீங்கள் ஆசனத்தின் கைப்பிடியை இறுகப் பற்றியதை......''

''என் விசனத்துக்குக் காரணம் தெரிகிறதல்லவா?''

''உங்களுக்குக் காரணம் மட்டும் தெரிகிறது. எனக்கு விடையும் புரிகிறது. சொல்லவா?''

''தாராளமாக.''

''கிடைக்க முடியாததை எண்ணி ஏங்காமல் கிடைக்கக் கூடியதை ஏற்று மகிழ்வதுதான் வழி.''

''தேவி... நீ...''

அவன் அவளை ஆச்சர்யமாகப் பார்த்தான். அவள் தலை அவன் முன்பு முதல் தடவையாகத் தாழ்ந்தது.

''என்னை மன்னியுங்கள். ராஜதந்திரம் போர்த் தந்திரம் என்றெல்லாம் ஆண்மக்களுக்கு நிகராகப் படித்தும் பேசியும் வந்த காரணத்தால் பெண்மைக்குரிய அணிகலனான நாணத்தைத் துறந்து பேசிவிட்டேன்.''

திரும்பிப் போக அவள் யத்தனிக்கையில் இரு கரங்களையும் பற்றி நிறுத்தினான்.

''தேவி! இவ்வளவு மனம் விட்டு நீ பேசியும் உனக்கு ஆதரவான பதிலைக் கூற இயலாத கல் நெஞ்சனாயிருக்கிறேன். உன் கோமளமான இதயத்தின் தாபத்தைப் புரிந்து கொண்டும் அதைப் புண்படுத்தும் நீசனாகிறேன்'' என்று தன்னையே நொந்து கொண்டான். ''தேவி என் கவலை இப்போது மேலும் அதிகரித்து விட்டது.''

''என்ன வேடிக்கை பார்த்தீர்களா?'' என்று அவள் சோகப் புன்னகை செய்தான். ''நான் உங்களை விரும்ப நீங்கள் அபிமானவல்லியை எண்ணி உருகுகிறீர்கள். ஆனால் அவளோ நீங்கள் ஆயுள் தண்டனை பெற்ற கைதியாகச் சிறையில் வாடுவதாகவே எண்ணியிருக்கிறாள். அதனால் சற்றும் பாதிக்கப்படாமல் மிக உயரத்தில் இலக்கு வைத்துச் சோழ மன்னரையே தன் மன்மத பாணங்களுக்கு இரையாக்கி இருக்கிறாள். இதே நேரத்தில் சேரமான் தாணுரவி ராஜநர்த்தகியின் கலைச் சிறப்போடு எழில் வனத்தையும் எடை போடுகிறார். இளங்கோப் பிச்சியோ அபிமானவல்லிக்கு ஆதித்தன் அடிமையாகி விடக் கூடாதே என்று ஒவ்வொரு கணமும் பதறித் துடித்துக் கொண்டிருக்கிறாள்!''

''அப்படியா தேவி! இத்தனையையும் இன்று அரசவையில் நீ அவர்களுடைய முகக் குறிகளைக் கொண்டே படித்துவிட்டாயா! நிகரற்ற ராஜதந்திரி தான் நீ. சேரமான் உன்னிடம் வைத்துள்ள பெருமதிப்பு எவ்வளவு நியாயமானது என்பதைத் திரும்பத் திரும்ப நிரூபித்து வருகிறாய்!''

''சிக்கலைக் கண்டு கொள்ளப் புத்திசாலித்தனம் போதும். அதை விடுவிக்கத்தான் ராஜ தந்திரம் தேவை'' என்றான் கடம்ப மாதேவி. ''ஆனால் இந்தக் காதல் சிக்கலை என்னால் கூட விடுவிக்க முடியுமா என்பது சந்தேகமாகவே இருக்கிறது.''

இருவரிடமிருந்தும் ஒரே நேரத்தில் பெருமூச்சுக்கள் பிரிந்தன.

● ● ● ●

கடம்பமாதேவியும் குலாந்தகனும் உத்தியாவனத்தில் மனம் திறந்து பேசிக் கொண்டிருந்த அதே சமயத்தில் ஆதித்தன் அபிமானவல்லியை அவளது மாளிகையின் மேன்மாட உப்பரிகையில் சந்தித்து அளவளாவிக் கொண்டிருந்தான்.

ஓய்வெடுத்து, நடனமாடிய களைப்பெல்லாம் நீங்கப் பெற்று இளவேனில் போலிருந்தாள்.

''வல்லி! உன் நடனம் இன்று அற்புதமாயிருந்தது'' என்றான் ஆதித்தன். ''இன்னும் கொஞ்ச நேரம் பார்க்க மாட்டோமா என்று என்னை ஏங்க வைத்து விட்டாய். ஆனால் சேரமான் தான் போதுமென்று கூறி விட்டார். வரவேற்பு வைபவங்களாலும் ராஜோபசாரங்களாலும் களைத்துப் போய் விட்டார் போலும்.''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. அவர் நடனத்தை எங்கே கவனித்தார்! என்னைத்தான் பார்த்துக் கொண்டிருந்தார்! அவர் கண்களில் கலை ஆர்வத்தை நான் காணவில்லை. காம வேட்கைதான் நிறை தளும்பியது... பிரபோ! உங்கள் நண்பரைப் பற்றிக் குறை கூறுவதற்காக என்னை மன்னியுங்கள்... எனக்கென்னவோ அவரைப் பிடிக்கவில்லை... பயமாயிருக்கிறது!''

''கண்ணே! நானிருக்கையில் உனக்கு ஓர் ஆபத்தும் வராது!'' என்று நடுங்கிய உடலை அணைத்து ஆறுதலளித்தான். ''சேரமானும் அப்படியொன்றும் பொல்லாதவனில்லை. நான் மனம் வருந்துமாறு ஏதும் செய்து விட மாட்டான்.''

''அவர் எப்படியோ போகட்டும். தாங்கள் எத்தனை நாட்களுக்குப் பிறகு அடியாளைத் தேடி வந்திருக்கிறீர்கள்! திடீரென்று சொல்லாமல் கொள்ளாமல் எங்கே போனீர்கள், எதற்காக? பழையாறையில் அனைத்துப் பிரம்மாதிராஜர்களின் மிகப் பெரிய ஆலோசனைக் கூட்டம் நடந்ததாமே? கேள்விப்பட்டேன்!''

''அட! அது இவ்வளவு தூரத்துக்கு எட்டிவிட்டதா?''

''தெரிய வராமலென்ன, பிரபோ! தலைநகரின் கடைத் தெருக்களில் கூட அதைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள். சீக்கிரமே வடதிசைப் படையெடுப்பு நடக்குமென்றும் சேரமான் அதற்கு உதவவே வந்திருக்கிறார் என்றும் கூறுகிறார்கள்!''

''பார்த்தாயா! அரசாங்கக் காரியங்களை ரகசியமாக வைத்திருப்பது என்பது எவ்வளவு சிரமம் என்பது தெரிகிறதல்லவா!''



''அவனைப் பைத்தியக்காரன்னு எப்படிச் சொல்றே?''

''எதை வாங்கினாலும் 'லூஸ்'லே வாங்கறானே!''

—நெல்லை சுவாதி.

''பழையாறையில் ஒரு போர்த்திட்டம் வகுக்கப்பட்டது என்று அறிப்பதில் யாருக்கு என்ன சிரமம்? அந்தத் திட்டம் என்ன என்பது வெளியே தெரிய வராதவரையில் ரகசியம் பாதுகாக்கப்பட்டு வருவதாகத் தானே பொருள்!''

''ஆம், வல்லி! இரவு உறங்கப் போகு முன்னர் அதைத்தான் மறுபடி படித்து மனனம் செய்ய எண்ணியிருக்கிறேன். ஒவ்வொரு சேனைத் தலைவனும் ஒவ்வொரு கணமும் எங்கே இருப்பான், என்ன செய்து கொண்டிருப்பான் என்பதை நிர்ணயித்து அத்தனை பேரையும் நிர்வகிக்க வேண்டிய பெரும் பொறுப்பு அல்லவா என்னுடையது!''

''அப்படியானால் வடதிசைப் படையெடுப்புக்கு இன்னும் அதிக நாள் இல்லை என்று சொல்லுங்கள். தானுரவி உடன் வருகிறாரல்லவா?''

''இல்லை... ஏனோ அவன் எனது நெருங்கிய நண்பனாய் இருந்தும் பல்லவனைப் பகைத்துக் கொள்ள விரும்பவில்லை.''

''பார்த்தீர்களா! நான் கூறியது சரியாகி விட்டதா! பிரபோ எனக்கு அவரை எண்ணினாலே அச்சமாயிருக்கிறது. எதற்கும் எச்சரிக்கையாக இருங்கள்!''

''ஆகட்டும் வல்லி! நீயும் விழிப்புடன் இரு! உனக்கு மெய்யென்று தெரிய வருகிற செய்திகளை அவ்வப்போது ஓலை எழுதி முத்திரை பதித்துப் போர் முனையில் இருக்கும் எனக்கு அனுப்பி வா. உன் மாளிகைக்காவலரை ஒருவர் பின் ஒருவராக இதற்குப் பயன்படுத்திக் கொள். உன்னிடமிருந்து உன் முத்தங்களை ஏந்தி வரும் ஒவ்வொரு ஓலையும் எனக்கு ஒரு யானை பலத்தை அளிக்கும்.''

''பிரபோ, யுத்த களத்துக்குச் செல்லும் ஆடவரை வழியனுப்பி வைக்கும் மகளிர் நிலை எவ்வளவு சிரமமானது! கவலையையும் வருத்தத்தையும் கண்ணீரையும் அச்சத்தையும் உள்ளூர அடக்கிக் கொண்டு வெளிப் பார்வைக்குத் தைரியமாகவும் முகமலர்ச்சி

யுடனும் தோன்றி ஆரத்தி எடுக்க வேண்டும், இல்லையா?'' என்ற வல்லி மகிழ்ச்சி ஊற்றெடுக்கும் வதனத்தோடு அவனை நெருங்கினாள். அவன் கழுத்தைச் சுற்றிக் கரத்தை வளைத்து இழுத்துக் குனியச் செய்து தன் குதிகால்களை உயர்த்தி மேலெழும்பி, ''இதோ நான் பதிக்கும் வெற்றித் திலகம்'' என்று கூறி நெற்றியிலே முத்தமிட்டாள்.

• • •

அன்று மாலை ஆதித்தன் அபிமான வல்லியைச் சந்தித்து விட்டுத்தான் வந்திருக்கிறான் என்பதை அறிந்திருந்தும் பழையாறைக்கு இரவோடு இரவாகச் சென்ற அன்று தன்னிடம் விடைபெற்றுக் கூடப் போகவில்லை என்பதை மறவாதிருந்தும் இளங்கோப்பிச்சி அதையெல்லாம் ஒதுக்கி விட்டு அந்தப்புரத்தில் ஆதித்தனை வரவேற்கச் சித்தமானாள். அலங்கரித்துக்கொள்வதில் ஆர்வமுடன் கவனம் செலுத்தினாள். பல நாட்களுக்குப் பிறகு அவன் வரும் வேளையில் குணங்களையன்றிக் குறைகளை எண்ணக் கூடாது என்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டாள். ''தெய்வம் நம்மைச் சோதிக்கிறதே என்று எண்ணுகிறோம். நாளடைவில்தான் நமக்கு அவன் கருணை புரிகிறது. எல்லாம் நன்மைக்கே . என்று தெளிகிறோம். அதேபோல் மன்னரையும் முழுமையாக நம்பி நம்மை ஒப்படைத்து விட வேண்டியதுதான்'' என்று நம்பி கூறிய அறிவுரையை அடிக்கடி நினைவு படுத்திக் கொண்டாள்.

வரும்போதே உற்சாகம் கொப்பளிக்க வந்த ஆதித்தன், ''பிச்சி! உன்னைப் பாராட்ட வார்த்தைகள் இல்லை; தாணுரவிக்குத் தலைநகரின் வீதிகளிலே வரவேற்பு வைபவத்தையும் அரண்மனையின் உள்ளே ராஜோபசாரத்தையும் ஒரு குறையுமின்றித் திட்டமிட்டுச் செவ்வனே நிறைவேற்றி வைத்து விட்டாய்'' என்றான்.

''ஏதாவது வாங்கணும்னா எப்பவும் நீதான் போவே; இன்னிக்குத் திடீர்னு உன் மனைவி போறாங்கிறியே, என்ன வாங்க?''

''பீச்சிலே காத்து வாங்க!''

—நெல்லை சுவாதி.



''உங்கள் அன்னையாரிடம் கூறுங்கள். அவர்தான் ஒவ்வொரு சிறிய அம்சத்தையும் கவனித்து யோசனைகள் கூறினார்.''

''குலவையைப் பார்த்து விட்டு, கன்னர தேவனையும் வாழ்த்தி விட்டுத்தான் வருகிறேன். எத்தனை அழகான, பொருத்தமான பாடலைப் பாடினான்'' என்ற ஆதித்தன் அப்போதுதான் அவள் அலங்காரத்தைக் கவனித்தவனாக ''அடேடே! அழகுத் தேவதைக்கு அலங்காரம் வேறா?'' என்று கேட்டு அவள் தோள்களைப் பற்றி விளக்குகளின் ஒளியில் இப்படியும் அப்படியுமாகத் திருப்பிப் பார்த்தான்.

''பிரபோ! மாலையே தங்களை எதிர்நோக்கியிருந்தேன். சூரிய ஒளியில் என்னைத் தாங்கள் பார்த்திருந்தால் பரவசப்பட்டிருப்பேன்.''

''நல்லவேளை நான் தாமதமாக வந்தேன்'' என்றான் ஆதித்தன். ''மாலையில் ஒரு சூரியனின் ஒளிதான் உன் ஆபரணங்களில் பட்டுப் பிரதிபலித்திருக்கும். இப்போதோ இத்தனை தீபச் சுடர்களின் ஒளியையும் உள்வாங்கிப் பின் சிதற அடிக்கும் போது உன் மேனி எப்படித் தகதகக்கிறது தெரியுமா?'' என்று கேட்டு அவள் கரங்களைப் பற்றி இழுத்துத் தன்னைச் சுற்றி வளைக்கச் செய்தான். இளங்கோப்பிச்சி, தான் என்ற நினைவின்றி அவனோடு இழைந்தாள்.

நீண்ட நேரம் சென்று உடல் தளர்ந்து உறங்கிய போது கனவிலே அவளிடம் போர்க்களம் செல்ல விடைபெற்றான் ஆதித்தன். நெற்றியிலே வெற்றித் திலகமிட்ட அவளிடம் ஒரு கோரிக்கையும் விடுத்தான்: ''பிச்சி! எனக்கு ஒரு வரம் தர வேண்டும். நான் படைகளுடன் வடதிசை சென்றிருக்கும்போது அபிமானவல்லிக்கு எந்தவிதமான தீங்கும் நேராமல் நீ காக்க வேண்டும்.''

கனவுதானா இது? அல்லது பக்கத்தில் படுத்திருக்கும் ஆதித்தன் பேசுகிறானா? கனவும் நினைவும் கலந்த ஒரு நிலையா?

''அப்படியே ஆகட்டும், பிரபோ. என் உயிரைத் தந்தேனும் அவளைப் பாதுகாத்து நீங்கள் திரும்பி வந்ததும் ஒப்படைப்பேன்'' என்றாள்.

''வல்லிக்கும் இந்தச் சுரங்கப் பாதை விஷயம் தெரியும். இப்போதே கூட அவள் இங்கு வரலாம்...''

சொல்லி வைத்தாற்போல் அதே சமயத்தில் நறநறவென்று ஒரு கற்சிலை நகரும் சத்தம் எழத் திடுக்கிட்டுக் கண்விழித்தாள் பிச்சி.

ஆதித்தனுடைய பராக்கிரமம் மிக்க பலம் வாய்ந்த கரங்கள் தன்னைக் கட்டி அணைத்து நெரிப்பதை உணர்ந்தபோது அவளுக்கு வியப்பு உண்டாகவில்லை. ஆனால் அவனுடைய [illegible] உள்ளங்கை தன் வாயை [illegible]ப் பொத்தவும் இனம் புரியாத பீதி [illegible]ந்தாள்.

(தொடரும்)

சிவராமனுக்கு அந்தச் சந்தேகம் இன்னும் தீர்ந்தபாடில்லே!

யாராயிருக்கும்?

வீட்டில் — அவன் — மனைவி — ஒரே மகன் சுரேஷ்!

சமீபத்தில் யாரும் அவன் வீட்டிற்கு வந்ததில்லே விருந்தாளியாகக் கூட! அப்படியிருக்க அவன் மேஜையிலிருந்து திருடுமனவுக்குச்(?) சொந்தம் கொண்டாடுபவர் யார்?

ஒருவேளை சுரேஷாயிருக்குமோ?.. சே..சே! அப்படியெல்லாம் இருக்காது!

''சிவராமன்... சிவராமன்...!''

பக்கத்து சீட்டு ஹெட்கிளார்க் கூப்பிட்டதும் ஆபீஸ் மூடுக்கு வந்தான்!

''என்ன சார்!''

''என்ன... ஏதோ சிந்தனை போலிருக்கு?''

''ஒண்ணுமில்லே சார்! மாதக் கடைசியாச்சே! அதான்...!''

''ஆமா சார்! இந்த மாதக் கடைசி கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தனுக்கு ஒரு வில்லன் மாதிரி!'' — என்று சொல்லி அவரே சிரித்துக் கொண்டார்!

''நேத்து பாருங்க! என் பையனைக் கையும் களவுமாப் பிடிச்சுட்டேன்!'' — என்று நிறுத்தினர் சஸ்பென்ஸாக!

சிவராமன் 'பையன்' என்றதும் கருக்கென்றுப்போல் ஆர்வத்துடன் ''என்ன விஷயம் சார்!'' என்றான்.

''கொஞ்ச நாளா நான் பிடிக்கிற சிகரெட் ரெண்டு மூணு குறைஞ்சிட்டு இருந்தது வீட்டுல வைச்சிருந்த போது! — எப்படிக் குறையுதுன்னு இத்தனை நாளா நானும் கவனிக்கல! நேத்து பாருங்க! — என் மகன் கையில ரெண்டு சிகரெட்ட எடுத்துக்கிட்டுப் பக்கத்துச் சந்துல புகுந்தான். எனக்கு சந்தேகம்... நானும் பின்னாடியே போய்ப் பார்த்தேன்! அங்கே இவனும் இன்னொருத்தனும் சிகரெட் பிடிச்சிட்டு இருந்தானுங்க! விட்டேன் பாருங்க ரெண்டு அறை! அலறிட்டான் அங்கேயே... பையன வீட்டுக்கு இழுத்துட்டு வந்து கம்பெடுத்து நாலு விளாசு விளாசினேன்! லட்சுமி பதறிட்டு வந்தா! விஷயத்தைச் சொன்னேன்! அவ நாலு குடுத்தா! இரண்டு பேரும் அடிச்ச அடியிலே காய்ச்சல்ல படுத்துட்டான்! இந்தச் சின்ன வயசில இப்படிக் கெட்டுப் போறானுங்க! இதுக்கெல்லாம் காரணம் என்னன்னு நினைக்கறீங்க!'' — என்று கேள்வியோடு முடித்தார் ஹெட்கிளார்க்.

சிவராமனின் மனம் குறுகுறுத்தது. அவனும் சிகரெட் பிடிப்பவன். ஒருநாளைக்கு ஒரு பாக்கெட்டோ, 2 பாக்கெட்டோ! அவன் பார்க்கும் உத்தியோகத்திற்கு 'ரிலாக்ஸேஷன்' தேவை என்பது அவன் எண்ணம். ஹெட் கிளார்க் கேட்ட கேள்வியால் பதில் சொல்ல முடியாமல் அசடு வழிந்து....

பொ. பொன்ராஜ்குமார்





## எரியும் இதயங்களே

உங்கள்
இதயம் மென்மையானது
அதை
சிகரெட்டால் சிதைத்து விடாதீர்கள்....

இரத்தம் தூய்மையானது
அதை
சூடாக்கி கண்டவிடாதீர்கள்....

உங்கள்
உதடுகள்
தேன் சுமக்குமொரு
தேவதைக்குச் சொந்தமானது
அந்த
சிகப்பு ரோஜாக்களை
வேகவைத்து வெள்ளையாக்கிவிடாதீர்கள்...

வசந்தங்களை
புகையாக்கி
வருங்காலத்தை சுட்டுவிடாதீர்கள்...
வாயில் தீவைத்து
வாழ்க்கையை எரித்து விடாதீர்கள்...

நுரையீரல்களின்
நுண்ணறைகளை
அடுப்பாக்கி
அணைந்து போகாதீர்கள்...

புண்பட்ட நெஞ்சை
புகை கொண்டு
பொசுக்கி விட்டு
ஆற்றி விட்டதாக
அமைதியா கொள்கிறீர்கள்?...

உங்கள் பிணம்
எரிப்பதற்கு எளியதாகும்
காரணம்
பாதி உடலை நீங்கள்
பக்குவமாய் எரித்து விட்டீர்களே...

சின்னச் சின்ன
சிகரெட் பெட்டிகள்
கட்டப் போகும் கல்லறைக்கு
கற்கள்
இறந்தபின் அவைகளை
எண்ண முடியாது
எனவே—
இருக்கும்போதே 'வாழ்வை'
எண்ணி விடுங்கள்.

எஸ். முத்தையா எம். பி. பி. எஸ்.,
கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி,
சென்னை -10.

''அது வந்து... என்னத்தை சார் சொல்றது!'' — என்று மெல்லக் கழன்று கொண்டான்.

ஹெரட் ஸொர்க்கின் பேச்சால் சிவராமனின் மனம் சுரேஷிடம் தாவியது!

சுரேஷ் —

இதுவரைக்கும் அவன் எந்தத் தப்பும் செய்ததில்லை. 6—வது தான் படித்தாலும் புத்திசாலிப் பையன் என்று சுரேஷின் வாத்தியார் சொல்லக் கேட்டுப் பெருமைப்பட்டுக் கொண்டவன் சிவராமன். அதிகமாக சினிமாவுக்குப் போக மாட்டான். அவனுடைய நண்பர்களும் நல்லவர்கள்தான்! — இருந்தாலும் ஹெரட் ஸொர்க்கின் பேச்சு சிவராமனை அலைக்கழித்தது. தன்னுடைய மேஜையில் இருந்த சிகரெட் பாக்கெட்டில் மூணு நாளாக சிகரெட் சட்டென குறைந்து போனது பெரிதாகப்படாவிட்டாலும் சுரேஷ்தான் எடுத்திருப்பான் என்றால்.... மனம் வேதனையால் துடித்தது!

மாலை 6.30

சுரேஷ் வீட்டில் படித்துக் கொண்டிருந்தான்!

சரளா அவனுக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தாள்!

சிவராமன் வீட்டிற்குள் அசுவாரசியமாக நுழைந்தான். சுரேஷை ஒரு நிமிஷம் பார்த்தான். சுரேஷ் அப்பாவைப் பார்க்காமல் படித்துக் கொண்டிருந்தான்.

''சரளா, காபி!'' — என்று சொல்லி விட்டுத் தன் ரூமிற்குள் நுழைந்தான்.

''இந்தாங்க...! இன்னிக்கு பால்காரன் வரல! அதனால காபி போடல! நீங்க வேணும்னு கடைல போயி குடிச்சிட்டு வாங்களேன். சுரேஷிற்குக் கால் பரிட்சை ஆரம்பிக்குதாம். படிச்சிக்கிட்டு இருக்கான்'' —அறைக்குள் எட்டிப் பார்த்து மெல்லப் பேசினாள் சரளா.

''சரி... சரி. எனக்குக் காபி வேணும்! மூஞ்சி கழுவத் தண்ணி எடுத்து வை!''— என்று சொல்லிவிட்டுச் சிகரெட் பாக்கெட்டைப் பிரித்தான். அதில் ஏழு சிகரெட் இருந்தது. ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு கொல்லைப் பக்கம் போனான்!

சரளா அடுப்படிக்குள் நுழைந்தாள்!

சிவராமன் முகத்தை நன்றாகத் துடைத்தபடி கண்ணாடிக்குத் தரிசனம் கொடுத்தான். தலைவாரிக் கொண்டு சட்டை போட்டுக் கொண்டான்.

''ரெண்டு பக்கோடா பொட்டலம் வாங்கிட்டு வந்தாத் தேவலை. சுரேஷும் சாயந்தரம் காபி குடிக்கல. தின்பதற்கு ஒன்றும் கொடுக்கல!'' — என்று சரளாவின் குரல் அடுப்படியில் இருந்து வந்தது!

சிவராமன் தன் ரூமிற்குள் நுழைந்து ஒரு சிகரெட் பற்ற வைக்கலாம் என்று நினைத்து பாக்கெட்டைப் பிரித்துப் பார்க்க—அதில் —

இரண்டே சிகரெட்டுகள் தான் இருந்தன!

அவனுக்கு ஜிவ்வென்று கோபம் ஏறியது!

வீட்டில் அவர்கள் மூவரைத் தவிர வேறு யாருமில்லை! அப்படியிருக்க சுரேஷைத் தவிர



# பிலிப்ஸ்

## கொஞ்சிடும் ஒளிப் பிஞ்சு
## இரவெல்லாம் தவழும்...!



# பிலிப்ஸ் நைட் லாம்ப்

மென்மையான மங்கிய ஒளிக்கு
பிலிப்ஸ் நைட் லாம்ப். வீடுகளிலும்
மருத்துவ மனைகளிலும்
இரவெல்லாம் தேவையான
சிறு ஒளிக்கு ஒரு
விளக்கு
இதன்றோ!



மிக
நீடித்த
ஆயுள்

பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகட்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்.

HTB-PEL 9639

வேறு யாரும் எடுத்திருக்க முடியாது என்று நினைத்து வேகமாக வந்தான் கையில் கம் போடு!

''சுரேஷ்'' — சிவராமன் சத்தம் போட்டதும் சுரேஷைப் பாய்ந்து வந்தாள் சரளா.

சரளா இருவரையும் நெருங்குவதற்குள் நாலு அடி விழுந்தது சுரேஷிற்கு.

''எத்தனை நாளா இந்தப் பழக்கம்!— எனக்குத் தெரியாம சிகரெட் எடுத்துக் குடிக்கிறியா? — ஏண்டா! என்னை என்ன மறதிக்காரன்னு நினைச்ச'' — என்று ஒவ்வொரு சொல்லுக்கும் அடி விழ — சுரேஷ் 'அம்மா அம்மா' என்று அலற சரளா சுரேஷை விடுவிப்பதற்குள் பிரளயமே வந்து விட்டது.

சிவராமன் களைத்துப் போய் — ''ஏ சரளா! உன் பையன் சிகரெட் எடுத்தானா இல்லையான்னு கேளு! இப்ப நான் வந்துபோறதுக்குள்ள நாலு சிகரெட்ட காணோம்.... நாலு நாளா சிகரெட் ரெண்டு மூணு குறையுது. நான்தான் குடிச்சிருப்பேன்னு நினைச்சு பேசாம இருந்துட்டேன். இன்னிக்கு ஹெட்மாஸ்டர் சொன்னப் பிறகுதான் புரிஞ்சது! ஏண்டா! ராஸ்கல் — மறுபடியும் 'பளார்!'— ''சொல்லு சிகரெட் எடுத்தியா! இப்ப குடுத்தியா? எங்க சிகரெட்? இன்னொரு பளார்!...

''அப்பா — அடிக்காதீங்க...'' கேவிக்கேவி அழுதான் சுரேஷ்.

''சொல்லுடா... உன்னைச் செல்லங் குடுத்து வளர்த்ததற்கா?...''

''அடிக்காதீங்கப்பா... அடிக்காதீங்கப்பா, நான் சிகரெட் குடிக்கல. நான் சிகரெட் குடிக்கலப்பா...! அன்னிக்கு எங்க வாத்தியார் சிகரெட் குடிச்சா புத்துநோய்வரும்— நுரையீரல்லாம் கறுப்பா மாறிடும்... ரத்தமெல்லாம் அசுத்தமாயிடும்... சிகரெட் குடிக்கிறது தற்கொலை பண்ணிக்கிறமாதிரி— அப்படின்னு சொன்னாரப்பா — நீங்க தினமும் 1 பாக்கெட், 2 பாக்கெட் சிகரெட் குடிக்கிறது வாத்தியார் சொன்னதுல இருந்து எனக்குப் பிடிக்கல... எனக்கு... ஆசையா எல்லாம் வாங்கித் தர்ற... அப்பா இப்படி தினமும் தற்கொலை ... செய்துக்கக் கூடாதுன்னுதான் நான் தினமும் ரெண்டு மூணு சிகரெட் எடுத்து... அதைப் பிச்சு சாக்கடையில் எறிஞ்சேன்... நான்... நான்... செஞ்சது தப்பாப்பா...'' என்று சுரேஷ் கேட்க —

''இல்லப்பா... சுரேஷ். இல்லவேஇல்ல... இனிமே நான் சிகரெட் குடிக்கவே மாட்டேன்ப்பா! சாமி சத்தியமா சொல்றேன்! இனி நான் சிகரெட் குடிக்கவே மாட்டேன்...!'' என்று சுரேஷைத் தழுவிக் கொண்டான் சிவராமன் நனைந்த கண்களோடு. சரளாவும் கன்னங்களில் தேங்கி நின்ற கண்ணீரோடு முகமலர்ந்தாள்!

பொ. பொன்ராஜ்குமார்,
முதுநிலை அறிவியல் (பௌதிகம்),
இரண்டாம் ஆண்டு.
76, பி. ஜி. விடுதி,
மதுரைக் கல்லூரி,
மதுரை—625 011.



## நானோர் புதுக்கவிதை

உணர்ச்சிகளின் தொகுப்பே
உன்னதக் கவிதையென்றால்
உலகில் நானே
உண்மையான கவிதை.

அசைபோடும் நினைவில்
அழுகையின் முடிவில்
அரும்புவதே கவிதையென்றால்
அகிலத்தில் நானே
அழியாக் கவிதை.

துன்பத்தின் வனப்பில்
புண்பட்ட மனத்தில்
கிளைவிட்டு எழுவதே
முதல்தரக் கவிதை யென்றால்
நிலைகெட்ட உலகில்நானே
நிரந்தரக் கவிதை.

இதயத்தின் தவிப்பில்
இடிந்த எண்ணத்தில்
வழிகேட்டு வருவதே
வளமான கவிதையென்றால்
வஞ்சக உலகில் நானே
வரலாறு கண்ட கவிதை.

விதிபாடும் ராகத்தில்
மதிபோடும் தாளத்தில்
சதிராடும் வேளையிலே
மலர்வதே கவிதையென்றால்
மாறுமுலகில் நானே
மரபுக் கவிதை.

பூவிருக்கும் உறவுத்தேன் விடுத்து
புகுந்திருக்கும் பூநாகம் கடித்து
புழுவாய்த் துடிக்கும்போது
புறப்பட்டு வருவதே கவிதையென்றால்
புரியாத உலகில் நானுமோர்
புதுக்கவிதை தானே.

—பி. அமுதா,
எம். ஏ. பொருளாதாரம்,
பாரதிதாசன் பெண்கள் கல்லூரி,
புதுவை—1.

# டெபாசிட்தாரர்களுக்கு

# 24%

## வட்டி வழங்கப்படுகிறது

**மேற்படி கூடுதல் வட்டி**
**பென்ஷனர், மகளிர், மைனர்களுக்கு மட்டும்**
**V.I.P. BRIEF CASE அன்பளிப்புடன் வழங்கப்படும்**

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள்**
**ஏற்றுக் கொள்ளப்படுகின்றன**

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

| | | |
|---|---|---|
| சென்னை | : | 91, உஸ்மான் ரோடு (சிவா-விஷ்ணு கோயில் அருகில்)<br>தி. நகர், சென்னை-600 017<br>போன் : 447186 |
| பெங்களூர் | : | 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)<br>மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன் : 366971 |
| திருச்சி | : | 22 மதுரை ரோடு (முதல் மாடி)<br>திருச்சிராப்பள்ளி-620 008 |
| பாண்டிச்சேரி | : | 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்)<br>பாண்டிச்சேரி-605 001 |
| தஞ்சாவூர் | : | எண் : 2 & 3, முதல் மாடி, ஜி. ஏ. கனல் ரோடு,<br>தஞ்சாவூர்-613 001 போன் : 1626 |
| திருவண்ணாமலை | : | 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601<br>போன் : 483 |
| பட்டுக்கோட்டை | : | 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601<br>போன் : 453 |

# சொல் ஒன்று வேண்டும்

## 7

ராஜாவைப் போலீஸ் வேட்டையாட ஆரம்பித்து, முழுசாய், இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகிறது. இன்னும் ஒரு துப்பும் கிடைக்கவில்லை.

ஸ்ரீதரைக் கொன்றது ராஜாதான் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை. அதுவும் ஸ்ரீதரின் மேஜை மீதிருந்த — அழகான பேப்பர் வெட்டும் கத்தியினாலேயே அவன் இக்கொலையைச் செய்திருக்கிறான். கத்தியில் படிந்திருந்த விரல் பதிவுகள் இதை உறுதிப் படுத்தின. மற்றபடி ஸ்ரீதரின் அறையில், அவன் இறப்புக்கு முன்னும் பின்னும் பல ரேகைகள் பதிவாகியுள்ளதால் — போலீஸாரால் எந்த ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை...

தாரா, வழக்கம் போல ஆபீசுக்குப் போய் வந்து கொண்டிருந்தாலும் மனசுக்குள் விழுந்த அடியின் பிரதிபலிப்பு முகத்தில் அச்சாய்ப் பதிந்து விட்டது.

எப்பேர்ப்பட்ட அடி அது...

அன்று ராஜாவின் வாயிலிருந்து வந்த வார்த்தைகள் ஒவ்வொன்றுமே ஒரு சவுக்காய்....

அந்த நிமிஷத்தில் இவள் எத்தனைப் பெரிய சுயநலக்காரி என்பதை ராஜாவிடம் தோலுரித்துக் காட்டி விட்டாளே...

தங்களது கௌரவம் சிதறிப் போகும் என்பது தெரிந்தவுடன் இந்தப் பெண்கள் எப்படித்தான் இது மாதிரி பாறையாய் இறுகி விடுகிறார்களோ....

பாவம் ராஜா... அவன் எத்தனை இன்னல்களுக்கு நடுவில் மறைந்து மறைந்து இவளைப் பார்க்க வந்தான்.

அவன்—

போலீஸ் விசாரணையின் போக்கை அறிய வந்தான். முதல் நாள் தாராவுக்கும் ஸ்ரீதருக்குமிடையில் நடந்த போராட்டம் வெளி வந்து விடவில்லையே என்கிற பதைப்புடன் இவளை விசாரிக்க வந்தான். ஆபீசில் நடந்தவை அவனைத் தவிர வேறு யாருக்காவது தெரிந்து விட்டதோ என்பதைப் பற்றிக் கேட்க வந்தான். முக்கியமாக — இவள் புருஷன் வரையில் விஷயம் போகவில்லையே என்பதை உறுதி செய்து கொள்வதற்காக வந்தான்...

ஆனால் அவளோ...

அவனது வரவே, தன்னைக் காட்டிக் கொடுத்து விடுமோ என்கிற பயமும், முதலில் அவனை இங்கிருந்து அப்புறப் படுத்தியே ஆக வேண்டும் என்கிற பதட்டமும் ஒரு சேர...

அழுதபடிச் சிதற விட்ட வார்த்தைகள்...

''தயவு செஞ்சு இங்கேயிருந்துப் போயிடுங்க ராஜா... விஷயம் வெளியிலத் தெரியறதுக்கு முன்னாலே — கண்காணும எங்கேயாவது ஓடி ஒளியுங்க...''

''என்னைப் பத்தி எனக்குக் கவலையில்லே தாரா... நீங்க—''

''உங்களைப் பத்தி உங்களுக்குக் கவலையில்லாம இருக்கலாம். ஆனா என்னைப் பத்தின கவலை எனக்கு நிறைய உண்டு. நான் வாழ்க்கையில நிறைய அடி பட்டவ. இனிமே — என்னாலத் தாங்க முடியாது...''

''தாரா...''

''ஆமா மிஸ்டர்... முகத்துல ஒரு இஞ்ச் பவுடரும், லிப்ஸ்டிக்குமாப் போறா... இவளுக்கென்ன கவலையின்னு நினைப்பாங்க... எல்லாம் இந்த வயித்துக்காகப் போடற வேஷம். நான் படற பாடு தெருவுல போற நாய் படாது.... ஆபீசுக்குப் போனா அந்த ஆள் கையைப் பிடிச்சு இழுக்கறான். வீட்டுல வந்தா — என் புருஷன் சந்தேகத்தோட, வார்த்தைகளை நெருப்பு மாதிரி அள்ளி வீசறாரு. 'சீ போடா, நீயும் வேண்டாம். நீ தர்ற வாழ்க்கையும் வேண்டாம்'னு உதறியெறிஞ்சிட்டு வெளியில நடக்க ரொம்ப நேரம் ஆகாது... ஆனா — தனியா நிக்கற தாராவை இந்த உலகம் எத்தனைக் கேவலமா எடை போடும்கறதை நினைச்சுப் பார்த்தா...''



''......''

''பாருங்க. ஏற்கெனவே என்னைக் கேவல மாய்ப் பேசறவர் என் புருஷன். இப்படி யின்னு தெரிஞ்சா — நேரே எங்க அப்பா வீட்டு வாசல்லே போய் நின்னுக் கத்து வாரு... எங்க அம்மாவைக் கண்டபடி பேசுவாரு... இந்த மாதிரிப் பேச, ஒரு சான்ஸ் கிடைக்கலேயேன்னுதான் காத்திட் டிருக்காரு... தயவு செஞ்சு என்னைக் காட்டிக் கொடுத்துடாதீங்க...''

தாரா, சடாரென அவனிரு கால்களை யும் பிடித்துக் கொண்டு அழுகிறாள்.

''சத்தியமா உங்களை நான் காட்டிக் கொடுக்க மாட்டேன் தாரா...''

''போலீஸ் உங்களைப் பிடிச்சுட்டா...''

''அப்பக் கூடச் சொல்ல மாட்டேன்..''

''அடிச்சே உண்மைய வரவழைப்பாங்க ளாமே பாலீங்க...''

ராஜா சிரித்தான். ஒரு சிறுமியைப் பார்ப்பதுப் போல அவளைப் பார்த்தான்.

''எங்க அப்பா, என்னை அடிச்சதை விடவா... சின்ன வயசுலேயிருந்து அடி தின்னு வளர்ந்த உடம்பும்மா இது...உயிரே போனாலும் உண்மை வெளியே வராது... ஆனா... எனக்கு ஒரு உதவி மாத்திரம் நீங்க செய்தாப் போதும்...''

''என்னது?''

அவள் மிரள மிரள விழித்தாள். உள்ளூர ஒரு திகில். அற்பமானத் திகில். மட்ட மானதும் கூட.

'நேற்று நடந்த சம்பவத்தை வெளியில் சொல்லாமல் மறைக்க வேண்டுமானால் இத்தனை ஆயிரம் வேண்டும் என்று பயமுறுத்துவானோ...'

இந்த மனிதர்கள்தான் உதவி செய்தவர் களைப் பற்றி எத்தனைக் கீழ்த்தரமாக நினைத்து விடுகிறார்கள். உண்மையில் மனிதர் களால் மட்டுமே இந்த அளவுக்கு தரக் குறைவாகச் சிந்திக்க முடியும்... மிருகங் களிடம் காணப்படும் நன்றியுணர்வு கூட இவர்களிடம் இல்லாமல் போகிற கொடுமை இருக்கிறதே... அடடா...

தாரா — தன்னளவில் தன்னைப் பாது காத்துக் கொள்ள வேண்டும் என்கிற உணர்வைத் தவிர — வேறு சிந்தனையே இல்லா தவளாய் நின்றாள்.

''சொல்லுங்க. முடியுமானாச் செய்ய றேன்...''

அந்த 'முடியுமானா'வில் அவள் கொடுத்த அழுத்தம்...

அடிப் பெண்ணே... இவன் யார்... நேற்று வரையில் இவன் உனக்கு அன்னிய மானவனாக இருந்திருக்கலாம். ஆனால் — நேற்று மாலையில் நீ பாஞ்சாலி போலக் கதறிய போது — — கண்ண பரமாத்மா போல ஓடி வந்தவனாயிற்றே... யாரிடம் போய் இந்த வார்த்தை...

இந்தப் பதிலே அவனது வாயை அடைக்கப் போதுமானதாய்... ஆனால் அவள் விடவில்லை... அவன் அங்கு நிற்கிற ஒவ்வொரு கணமும் அவளுக்கு ஆபத்தா யிற்றே...

''உம்... சீக்கிரம் சொல்லுங்க... அவர் வந்திடப் போறார்...''

''பெரிய உதவி எதுவுமில்லே... எனக்காக தயவு செஞ்சு இந்த லெட்டரை — என் ஒய்ஃப் கிட்ட சேர்த்திடுவீங்களா... இல்லே— லெட்டர் கூட வேண்டாம். நான் பத்திரமா இருக்கறதா — என் பெண்டாட்டி காதுல விஷயத்தைப் போட்டுட்டாக் கூடப் போதும்...''

அவ்வளவுதான். ராஜாவின் முன் இரு கை களையும் ஒன்றாகக் குவித்தபடிப் படபடத் தாள் அவள்.

''உங்க வீட்டைச் சுத்திப் போலீஸ்... வீட்டுல இருக்கிறவங்க வெளியிலப் போக முடியாதாம்... உங்க அப்பாவைத் தவிர வேற மனுஷங்க பங்களாவுக்குள்ள நுழைய வும் முடியாதாம்... ரமாமணி சொன்னா.... அப்படியிருக்கறப்ப நானும் போய் வலையில் சிக்கிக்கறதா... மன்னிச்சுடுங்க... என்னால முடியாது...''

நிர்த்தாட்சண்யமாகச் சொல்லி விட்டாள் அவள்.

ராஜா அவளையே உறுத்துப் பார்த்து விட்டுக் கிளம்பி விட்டான்...

போகும் முன் அவன் சொன்ன சொற்கள்:

''மேடம். உங்களை மாதிரியே அவளும் பயந்த சுபாவம் கொண்ட பெண்தான்.



ரொம்ப சாது. பாத்திரத்தைப் பூனை தள்ளி விட்டா பயத்துல என்னை இறுகக்கட்டிப்பா... நேத்து அவளும் நானும் சினிமாவுக்குப் போறதா இருந்தோம். சினிமாவுலேயிருந்து ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிட்டுட்டு வீடு திரும்பறதா ப்ளான். அது கூட அவளுக்குத் தெரியாது. யூ நோ... இதெல்லாம் சின்னச் சின்ன சந்தோஷங்கள். அவளுக்கு இந்த சந்தோஷம் போதும். என் கிட்டேயிருந்து பெரிசா எதையும் எதிர் பார்க்கறதில்லே அவ... ஒரு சினிமா, ஹோட்டல்லே சப்பாத்தி குருமா, மூக்கு நுனியைச் செல்லமா நான் பிடிச்சு இழுக்கறப்ப ஏற்படற குஷி... ராத்திரி என் நெஞ்சு மேல பூப்பந்து போல சுருண்டு அவ உலகத்தையே என்கிட்ட ஒப்படைச்சுட்ட நிம்மதியிலத் தூங்கற தூக்கம்... இதுதான் அவளோட எதிர்பார்ப்புகள்...''

''.....''

''ஆனா — இப்ப உங்களைக் காட்டிக் கொடுக்கக் கூடாதுங்கறதுக்காக என் மனைவிய விட்டு விலகிப் போறேன். உங்களை உங்க புருஷன் வெளியிலத் தூக்கக் கூடாதுங்கறதுக்காக — நான் என் பெண்டாட்டியோட வாழ்க்கையை விட்டே வெளியேறறேன்... பரவாயில்லே. சத்தியமா நான் என் வார்த்தையைக் காப்பாத்துவேன். நீங்களாவே போலீஸ்லே என்னிக்கு எனக்காக சாட்சிக் கூண்டுல ஏறி, 'இவன் செஞ்சக் கொலைக்குக் காரணம் நான்'னு சொல்றீங்களோ — அது வரைக்கும் போலீஸ் கையில சிக்க மாட்டேன்... அப்படிச் சிக்க நேர்ந்தால் உடனேயே உயிரை விட்டுடுவேன்... குட்பை!''

பெங்களூரில் புகழ்பெற்ற நீல்கிரீஸ் நிறுவனம் நடத்திய 'கேக்' கண்காட்சியின்போது இடம் பெற்ற இந்த 'கீதோபதேசம்' பார்ப்பவர் கண்களுக்கும் வாங்குபவர் சுவைக்கும் விருந்து. விலை 2000 ரூபாய்! இதைப்போல் விதவிதமாகப் பெரிய பதினைந்துகேக்குகளையும், நூற்றுக் கணக்கில் சிறிய கேக்குகளையும் பார்வைக்கு வைத்திருந்தார்கள். இந்தக் கண்காட்சிக்காக 17 டன் எடைக்கு கேக்குகளைத் தயாரித்து விற்பனை செய்தார்கள். இதன் மொத்த மதிப்பு 7 லட்சரூபாய்!

—அ. குமார்.



அவன் 'விருட்'டென சமையற்கட்டு வழியே தோட்டத்துக்குப் போய் காம்பவுண்டு சுவர் வழியே வெளியே குதித்தான்.

அவன் தலை மறையும் வரையில்நெஞ்சை ஒரு கையால் பிடித்துக் கொண்டிருந்த தாரா — வெகு நாழிகைக்குப் பிறகுதான் சுய பிரக்ஞைக்கு வந்தாள்...

அந்தக் கணத்தில்தான் தான் செய்த மிகப் பெரிய தவறு புரிகிறது...

நேற்று மாலையிலிருந்து — இதோ இன்று மாலை வரையில்... பாவம் இவன் எங்கே தங்கினானோ என்ன சாப்பிட்டானோ.... கையில் பணம் இருக்கிறதோ இல்லையோ...

ஒரு வார்த்தை... ஒரேயொரு வார்த்தை-இதைப் பற்றி அவள் கேட்டிருக்கலாம்.... பாழாய்ப் போன சுயநலம் இப்படி மனிதாபிமானத்தைக் கூட அடித்துக் கொண்டுப் போக வேண்டாம்.

அன்று ஆபீசுக்குப் போன போது ரமாமணி இவளுக்காக வைத்திருந்த செய்தி. அவளை நிலை குலையச் செய்கிறது...

''ஆனாலும் அநியாயம்டி...''

''என்ன...''

''இந்த ஆம்பிளைகள் தங்களுக்குள்ள இருக்கற குரோதத்துல இப்படி ஒருத்தனையொருத்தன் வெட்டிக்கறாங்களே... அந்தக் கணத்துல தன் பெண்டாட்டி குடும்பத்தைப் பத்திக் கொஞ்சமாவது சிந்திச்சுப் பார்க்கறாங்களோ... என்ன அப்படிப் பார்க்கறே... நம்ம ஆபீஸ் ராஜாவைத்தான் சொல்றேன். இவன் பாட்டுக்கு கொலைய செஞ்சுட்டுத் தலைமறைவாயிட்டான். இங்கே இவன் பெண்டாட்டிக்கு இது நாலாவது மாசமாம்... நேத்து என் சின்ன நாத்தனாரை நர்ஸிங் ஹோமுக்கு அழைச்சிட்டுப் போயிருந்தேன்... இங்கேதான் இஸபெல்லாவுக்கு... அப்போ 'ஜீப்'லே மாமியாரும் மருமகளுமா வந்து இறங்கினாங்க... கூடவே ரெண்டு போலீஸ்... தலையெழுத்தைப் பாரேன்... இவன் செஞ்ச தப்பாலே — பெண்டாட்டியோட வயித்துல இருக்கற பிள்ளைக்குக் கூடக் காவல்...''

தாரா அவளையே இமைக்காமல் பார்க்கிறாள்.

''சாதாரணமா இந்த மாதிரி போலீஸ் ஆபீசர் வீட்டு மனுஷங்க வெளியில போறப்ப ரெண்டு போலீஸ் இருக்கறது சகஜம் தானே ரமா...''

''இருக்கலாம். ஆனா அது வேற... இது வேற... அது அப்பாவோடப் பதவியையும், செல்வாக்கையும் குறிக்கிறது... இது, பிள்ளையோட முரட்டுத் தனத்தையும், போலீஸோட சந்தேகத்தையும் குறிக்கிறது.. ரெண்டுக்கும் நிறைய வித்தியாசம்.''

ரமாமணி. பேசிக் கொண்டே போகிறாள்.

ராஜாவின். தாயை — இதற்கு முன் ராஜாவின் திருமண வரவேற்பின் போது

ஒருவர்: ரெண்டாயிரம் ரூபாய் தந்தால் என் மகனுக்கு வேலை வாங்கித் தர்றேன்னு சொல்ற நீங்க, உங்க மகனுக்கு ஏன் இன்னும் வேலை வாங்கித் தராமல் இருக்கீங்க?

மற்றவர்: மகன் என்கிறதாலே அவன் கிட்ட ஆயிரம் ரூபாய்தான் கேட்டேன். அதைக்கூடத் தரமாட்டேன்னு சொல்லும்போது நாம என்ன செய்ய முடியும்?

—பெருமாள்சாமி



பார்த்தது பற்றி... அப்போதைக்கு இப்பொழுது அவள் உடம்பு. ஆனாலும் மோசமாய் இளைத்திருப்பது பற்றி... ராஜாவின் மனைவியான உமா, ஜீப்பிலிருந்து இறங்கி டாக்டரை அவரது அறையில் சந்திக்கப் போகும் வரையில் குனிந்த தலையை நிமிர்த்தவே இல்லை என்பதுபற்றி... அவளது விழிகளைச் சுற்றிக் கருவளையம் விழுந்திருப்பது பற்றி... கூந்தல் பின்னப் படாமல் எவ்விதக் கவனிப்புமின்றி அள்ளி முடியப் பட்டிருந்தது பற்றி... கடைசிக் கடைசியாய்—இத்தனைப் பேச்சுக்கும் ஒரு முத்தாய்ப்பு வைப்பது போல — இப்பேர்ப்பட்ட அழகான மனைவியுடன் வாழவும் ஒருத்தனுக்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்பது பற்றி...

தாராவுக்கு ராஜாவின் மனைவியை அறிமுகமில்லை. அவளது திருமணத்துக்குப் பிறகுதான் — அவள் இந்த அலுவலகத்தில் வேலைக்குச் சேர்ந்தாள்.

ரமா சொன்னதிலிருந்து உமாவின் சௌந்தர்யம் — அவள் கண்ணெதிரே — சட்டம் போட்ட ஓவியமாய் வந்து நிற்கிறது.

கலைந்த கூந்தலும் கசங்கிய புடவையும் முகம் நிறைந்த சோகமுமாய்....

முன் பின் பார்த்தேயிராத அப்பெண்ணுக்குத்தான் எப்பேர்ப்பட்ட துரோகத்தை இழைத்திருக்கிறாள்...

அன்று மாத்திரம் ராஜாவின் வேண்டுகோளைச் செவி மடுத்து — அவன் மனைவியிடம் ராஜா பத்திரமாக இருப்பதைத் தெரிவித்திருந்தால்...

பாவம் அந்த ஒரு வார்த்தையே அவளது நெஞ்சுக்குப் பெரிய ஆறுதலாய்...

இப்பொழுது கூட ஒன்றும் மோசமில்லை. மனதிருந்தால் அதற்கான மார்க்கம் இல்லாமலா போய் விடும்...

தாரா ஐந்தாறு முறை காகிதத்தையும் பேனாவையும் எடுத்து விட்டு பிறகு அந்த எண்ணத்தையே கைவிட்டு விட்டாள்.

'வேண்டாம். கடிதம் எழுதினால் என்னைக் காட்டிக் கொடுக்க அதுவே நாளைக்குப் பயன்படலாம்...'

'டெலிபோனில் சொன்னால்....'

'ராஜாவின் பெண்டாட்டிதான் ரிஸீவரை எடுப்பாள் என்பது என்ன நிச்சயம்.... போலீஸ் இந்த வீட்டுக்கு வரும் தொலை பேசித் தகவல்களைக் கண்காணிக்காமலா இருக்கும்...'

அன்று முழுக்க தாரா இருப்பு கொள்ளாமல் தவிக்கிறாள். திருமணமான புதிதில் தன் வயிற்றில் இரண்டு மாதக் கரு வளர்ந்ததும் அதை பாபுவிடம் மகிழ்ச்சியும் நாணமும் போட்டிப் போடத் தான் சொன்னதும் பாபு அதை லட்சியமே செய்யாமல் புறக்கணித்ததும் 'நாம இருக்கற இருப்புக்கு இது ஒண்ணுதான் குறை' என்று எரிந்து விழுந்ததும் தகப்பனின் எரிச்சல் மிகுந்த வார்த்தைகளால் ரோஷப்பட்டாற்போல அந்தக் கரு அடுத்த சில நாட்களிலேயே கரைந்து போனதும்... இப்பொழுது நினைவுக்கு வர அழுகையை அடக்க முடியாமல் திணறிப் போகிறாள் அவள்.

'இன்னும் யார் பாவத்தையெல்லாம் கொட்டிக்கப் போறேனோ...'

தனக்குள் அரற்றியபடி வீடு திரும்பிக் கொண்டிருந்தவளை ரமாமணியின் குரல் தடுத்து நிறுத்துகிறது....

''அதோ பாரு... அந்த ஜீப்லே... அவ தான் ராஜாவோட பெண்டாட்டி...''

தாரா அவசரமாக ஜீப் போன திசையை திரும்பிப் பார்க்க — அந்தச் சமயம் பார்த்து, உமாவை மறைத்தபடி விஜி ஜீப்பிலிருந்து எட்டிப் பார்க்க...

''எனக்கு பஸ் வந்துடுத்து...''

ரமாமணி கிளம்பி விட்டாள்.

தாராவின் இதயத்தில் — விஜியின் உருவம், ராஜாவின் மனைவி ஸ்தானத்தில் 'பளிச்' சென இடம் பிடிக்கிறது.

(தொடரும்)

நீரைக் கொதிக்க வைத்தல், பாட்டிலை கிருமி நீக்கம் செய்தல், வெப்பநிலை சோதனை செய்தல்—ஆகிய பிரச்சனைகள் இல்லை.



புதிதாகப் பிறந்த குழந்தை உணவைப் பெற்றிட எத்தகைய சுலபமான, வசதியான, இயல்பான வழி இருக்கிறது பார்த்தீர்களா?

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இயல்பாக நடந்த நீண்ட சோதனை கணிப்பின் மூலம் இயற்கை கண்டு கொண்டுள்ளது:

குழந்தைக்கான தாய்ப்பாலை உன்னத உணவாக்குபவை அதில் இயல்பாக சரிவிகிதமாகக் கலந்துள்ள உடல் வளர்ச்சிச் சத்துக்கள் (புரதம்), சக்தி தரும் சத்துக்கள் (கார்போ ஹைட்ரேட்டுகள், கொழுப்பு) ஆரோக்கியமான பாதுகாப்புச் சத்துக்கள் (வைட்டமின்கள்) ஆகும்.

## தூய்மைக்கேடு பிரச்சினை இல்லை.

உங்கள் குழந்தை, முலையிலிருந்து பாலை நேரடியாக குடிப்பதால் தூய்மைக்கேடு ஏற்படும் அபாயம் அதில் இல்லை, தயாரிப்பு அல்லது பாலின் வெப்பநிலையை சோதித்தல் போன்ற பிரச்சினைகளும் அதில் இல்லை. அத்துடன் வயிற்றில் வாயுக்கோளாறுகள் மற்றும் இதர நோய்களிலிருந்து உங்கள் குழந்தையை பாதுகாத்திட தாய்ப்பாலில் நோய் எதிர்ப்புப் பொருள் இயல்பாகவே உள்ளது —இன்னும் இதர நன்மைகள்கூட அதிலே —உதாரணம் ஸ்கர்வியைத் தடுத்திட வைட்டமின் 'சி'. முலைப்பால் உண்ட குழந்தை பாதுகாப்பும் தன்னம்பிக்கையும் பெறுகிறது. காரணம் நீங்கள் குழந்தையை அரவணைத்து பாசத்தையும் சேர்த்தல்லவா பாலூட்டுகிறீர்கள்.

## நாளும் பிரபலமடைகிறது

அதன் ஊட்டச்சத்து மற்றும் இதர நலன்கள் விரிவாகவும் அதிகமாகவும் உணரப்படுவதால் மேல் நாடுகளிலும்கூட முலைப்பால் கொடுத்தல் மிக அதிகமாக பிரபலமாகி வருகிறது.

## உலகளாவிப் பிரபலமடைகிறது.

அதன் ஊட்டச்சத்து மற்றும் இதர நலன்கள் விரிவாகவும் அதிகமாகவும் உணரப்படுவதால் மேலை நாடுகளிலும் கூட முலைப்பால் கொடுத்தல் மிகவும் அதிகமாக பிரபலமாகி வருகிறது.

உங்கள் உடல் நல பாதிப்பு அல்லது பால் பற்றாக்குறை ஆகியவற்றால் நீங்கள் குழந்தைக்கு பால் கொடுக்கமுடியாமல் போனால் என்ன செய்வது?

உங்கள் குழந்தைக்கு நீங்கள் சிறந்த 'தாய்ப்பால் மாற்று' தேர்ந்தெடுக்க வேண்டும்.

## ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல்ஸ்ப்ரே

அமுல்ஸ்ப்ரே-நன்கு சமச்சீராக கலக்கப் பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போ ஹைட்ரேடுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெது வெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது. முன்னாலேயே அதை பசைபோல் தயாரிக்கவேண்டிய அவசியம் இல்லை.

## சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டது.

ஆனால் கொதிக்க வைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதை தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின்மீது குறிப்பிட்டுள்ள வழிமுறைகளை கவனமாக பின்பற்றுக.




# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்கு அடுத்ததுதான்.**

**இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—**
இதில் அடங்கியுள்ளவை: கருத்தரித்தல், பேறு காலத்திற்கு முன் கவனிப்பு, பிரசவம், தாய்ப்பால் ஊட்டுதல், வெளியில் கிடைக்கும் உணவு வகைகள், லேசான தானிய உணவு தருதல், குழந்தையின் அன்றாடக் கடன்கள், குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு, முதலுதவி, பொதுவான நோய்கள், நோயுற்ற குழந்தையைப் பாதுகாத்தல். தமிழ், இந்தி, மராத்தி, குஜராத்தி, ஆங்கிலம், தெலுங்கு மற்றும் மலையாள மொழிகளில்.

உங்கள் பெயர் மற்றும் முகவரியுடன் ரூ. 1.25 தபால் தலை ஒட்டி எழுதுக இம் முகவரிக்கு: தபால் பெட்டி எண் 10124, பம்பாய் 400 001.

ASP/AS-TAM6/83



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட்,
தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.

மூன்றுல் போர்ட்டர் போய்க் கொண்டிருந்தான். தலைக்கு மேல் ஒரு பெரிய பெட்டி. இரண்டு சின்னப் பெட்டிகள். ஒரு ராட்சத ஹோல்டால். தோய்க்க முடியாமல் போன அழுக்குத் துணிகள் அதற்குள் இருக்கின்றன. அந்த மூன்று சக்கர சைக்கின் எல்லாவற்றுக்கும் மேலே தொத்திக் கொண்டிருந்தது. மற்றபடி டெல்லியி லிருந்து வருபவர்கள் வாங்கி வரும் மோடாக்கள் இரண்டு. பெரிய அளவில் செய்யப்பட்ட உடுக்கைபோல்.

கணேசன், கும்பலில் ஹோல்டாலை அடையாளம் வைத்துப் போர்ட்டரைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தான். அவனுக்குச் சற்றுப் பின்னே லலிதா வந்து கொண்டிருந்தாள். பஞ்சாபி போர்ட்டர் சிரித்துக்கொண்டான். வேண்டுமென்றே நெளிந்து நெளிந்து ஓடுறான். ஒரு பெரிய தூணின் பின்னால் மறைந்துகொண்டு கொஞ்சம் நேரம் கணேசனைக் கதறடித்தான். தமிழனே! உனக்கு நன்றாக வேண்டும். நீ சுமை தூக்கும் பஞ்சாபிகளைப்பற்றி உன் மனைவியிடம் தமிழில் ஏதோ திட்டினாய். ஆரம்பம் முதலே என்னை அவநம்பிக்கையோடு பார்த்தாய். பேரம் பேசினாய். தலையில் சுமையிருக்கும் போதும் நான் வேகமாய்ப் போகக் கூடியவன். நீ ஹோல்டாலைப் பார்த்துக் கொண்டே பின்னால் ஓடி வர வேண்டியதுதான்.

போர்ட்டர் தப்புச் செய்து விட்டான். கணேசன் தமிழில் திட்டியது உண்மை. அது சுமை தூக்கும் பஞ்சாபிகளைப் பற்றி இல்லை. கணேசன், லலிதாமேல் கோபமாயிருந்தான். சாயங்காலம் விருந்தில் அவன் அவமானப்பட்டு விட்டான். ஆபீஸ் நண்பர்கள் கொடுத்த விருந்து. டிரெய்னிங் வந்த இருபது நாளில் கணேசன் நிறைய வடக்கத்



திப் பெயர்களையும், முகங்களையும் தெரிந்து கொண்டான். எந்த முகத்துக்கு எந்த பெயர் என்று சரியாய்ப் புரியுமுன்னர் டிரெய்னிங் முடிந்துவிட்டது. கணேசனை அவர்கள் மறக்க முடியாது. அவன் தமிழ்நாட்டிலிருந்து வந்த ஒரே ஆள். தமிழ்நாட்டிலிருந்து வருபவர்கள் மனைவியையும் அழைத்து வந்து விடுகிறார்கள். கூடவே குழந்தையையும்.

நான்கு மணிக்கு விருந்து. சின்ஹா, முகர்ஜி, லால், உபாத்தியாயை இவர்கள் மத்தியில் கணேசன் அந்நியப்பட்டுப் போனான். அவன் மனைவிக்கு ஆங்கிலம் தெரிந்திருக்கவில்லை. ஹிந்தியும் புரியவில்லை. விருந்தில் டைரக்டர் அடித்த இரண்டு ஜோக்குகளுக்கும் அவள் சிரிக்கவில்லை. அவள் கிராமத்துப் பசுமாடு. இருந்தும் அவர்கள் கணேசன் மகனுக்கு மூன்று சக்கர சைக்கிள் ஒன்றைப் பரிசாய்க் கொடுத்தார்கள். நூற்றி ஐம்பது ரூபாய். மெட்ராசில் நூறு ரூபாயிருக்கும். விருந்திலிருந்து நேரே ஸ்டேஷனுக்கு ஆட்டோ பிடித்தார்கள். ஆட்டோவில் சண்டை ஆரம்பித்தது.

''சைக்கிள் அழகா இருக்கு. இல்லே?'' என்று லலிதா கேட்டாள்.

''உம்.''

''சரவணன் ரொம்ப சந்தோஷமாய் ஓட்டும். பாவம், ரொம்ப நாட்களாய்க் கேட்டுக்கிட்டு இருந்தது.''

''நீ கொஞ்சம் வாயை மூடிக்கிட்டு வா.'

ம.வே.சிவகுமார்

லலிதா மிரண்டு போனாள். கணேசன் எதற்காகக் கோபப்படுகிறான் என்று அவளுக்குப் புரியவில்லை. கொஞ்சம் நேரம் யோசித்தாள். சிரித்துக் கொண்டாள். கையில் காசு இல்லாவிட்டால் அய்யர்வாளுக்குக் கோபம் வரும். இப்போது நூறு ரூபாய் தான் இருக்கிறது. அதை வைத்துக் கொண்டு அவன் ஆட்டோ, போர்ட்டர், ரயில் சாப்பாட்டுச் செலவு, மெட்ராசில் போர்ட்டர், மின்சார ரயில் டிக்கெட், அப்புறம் நங்கநல்லூரில் ரிக்ஷா இவ்வளவு செலவையும் செய்ய வேண்டும். ஆயிரம் ரூபாய் எடுத்து வந்தார்கள். எல்லாம் செலவாகி விட்டது. பேட்டா இருபது ரூபாய் வேறு தந்தார்கள். போதும்தான். ஆனால் கணேசன் மனைவியை அழைத்து வந்து விட்டான்.

''பெல் தூங்குது இல்லீங்க.''

''வாயை மூடு'', கணேசன் இன்னமும் சூடாகவேயிருந்தான்.

''கையிலே காசு இல்லேன்னு கோபமா?'' டிரைவர் பார்க்காத போது கையைக் கிள்ளி விட்டாள்.

''உனக்கு மூளை இல்லியே, அதை எங்கே சம்பாதிக்கறது?''

''ஏங்க?''

''சனியன், வாயை மூடு. விருந்தில் நீ எப்படி நடந்து கொண்டாயென்று யோசித்து பார். இங்கிலீஷ் தெரியாத மூண்டம். நாகரீகம் தெரியாத ஜென்மம். உம்முனு இருந்தியே தரித்திரம்.''

''அவங்க ஏதும் சொன்னாங்களா?''

''இல்லே. வழிச்சுக்கிட்டுச் சிரிச்சாங்க. இன்னமும் சிரிச்சுக்கிட்டு இருப்பாங்க. இனிமே டெல்லி ஆபீஸ் விருந்தின் போதெல்லாம் கணேசனைப் பத்தி, அவன் டிரெய்னிங்குக்கு மனைவியை அழைச்சுக்கிட்டு வந்தது பத்தி, அவ விருந்திலே தொலைஞ்சுபோன பசு மாடு மாதிரி மிரண்டது பத்தி கேலி பேசுவாங்க. நீ பேசாதே. வர்ர கோவத்துக்கு உன்னை ஆட்டோவோர்ந்து தள்ளிடுவேன்.''

சற்று முன் ஆட்டோ டிரைவர் கண்ணில் படாமல் கணேசனைக் கிள்ளிய லலிதா, இப்போது ஆட்டோ டிரைவர் கண்ணில் படாமல் அழுது கொண்டிருந்தாள். ஸ்டேஷன் வந்தது. போர்ட்டர் பதினைந்து ரூபாய் கேட்டிருக்கிறான். கணேசன் இருபது ரூபாய் தான் தருவேனென்று சண்டை போட்டான். ஹிந்தி தெரியாமல் ஏக ரகளை. இப்போது பஞ்சாபி போர்ட்டர் பழிவாங்குகிறான். ஹோல்டால் கண்ணில் பட்டு மறைந்து கொண்டிருந்தது. கணேசன் அந்தக் கோபத்தையும் லலிதா மேல் காட்டிக் கொண்டிருந்தான்.

கம்பார்ட்மெண்ட் கண்டுபிடித்து, பெட்டிகளை அடியில் தள்ளி, சைக்கிளை மேலே வைத்து, போர்ட்டருடன் மீண்டும் சண்டை. போர்ட்டர், ஹிந்தியில் ஒன்றுபட்டுப் போன சக பிரயாணிகளைச் சிரிக்க வைத்து அப்புறம்போனான். கணேசனுக்கு வெட்கமாய் இருந்தது. இன்னும் இரண்டு நாட்களுக்கு இவர்களெல்லாம் இந்த மோசமான அறிமுகத்தை ஞாபகம் வைத்திருப்பார்கள்.

வண்டி ஸ்டேஷனை விட்டு நகரும்போது கணேசன் லலிதாவைப் பார்த்து சிரித்தான். அவள் சிரிக்கவில்லை.

''காப்பி சாப்பிடுறியா?''

''வேணும்.''

கணேசன் கொஞ்சம் நேரம் பையனோடு விளையாடினான்.

''அது என்னடா?''

''சைக்கிள்.''

''நீ என்ன பண்ணுவே?''

''ஓத்துவேன். அப்பாவை ஆபீஸ்லே விடுவேன்.''

கணேசன் மீண்டும் லலிதாவைப் பார்த்து சிரித்தான்.

அவள் சிரிக்கவில்லை. அவளுக்குக் கோபமில்லை. ஆனால் வருத்தமாயிருக்கிறாள். இங்கிலீஷ், நாகரீகம் இரண்டும் தெரியாமல் போன வருத்தம்.

இரண்டு ரெயில்வே ஊழியர்கள் பழுப்பேறிய கருப்புக் கோட்டுடன் ஏறினார்கள். அவர்கள் கணேசன் பக்கத்தில் வந்து நின்றார்கள்.

''ஏ சைக்கிள் இஸ்கா?''

யாரும் பதில் சொல்லவில்லை. கணேசனைப் பார்த்தார்கள்.

''ஆங்கிலத்தில் கேள். நீ ரயில்வே ஆள். உனக்கு ஆங்கிலம் தெரிந்திருக்கவேண்டும்.''

''இந்தச் சைக்கிள் யாருடையது?''

''அது என்னுது.''

''புக் செய்திருக்கிறீர்களா?''

''இல்லை.''

''அபராதம், அம்பத்தி நாலு ரூபாய்.''

''எனக்கு புக் செய்யணும் என்று தெரியாது.''

''தெரிந்து கொள். ஒரு முறை அபராதம் செலுத்தி விட்டால் அப்புறம் மறக்கக்கூட மாட்டாய்.''

கணேசன் உதவிக்கு ஆள் தேடினான். ஒரு தமிழன் கூட கம்பார்ட்மெண்டில் இல்லை. ரிசர்வேஷன் இல்லாமல் பெட்டியில் நிறைய பேர் ஏறியிருந்தார்கள். சர்தார்ஜி ஒருவன் தன் மூன்று சக்கரச் சைக்கிளைப் பெஞ்சின் கீழ் மறைத்துக் கொண்டிருந்தான்.

''பெரியதாய் ரூல் போடுகிறீர்களே, ரிஸர்வேஷன் இல்லாமல் நிறைய பேர் வண்டியில் இருக்கிறார்கள். அவர்களிடம் எத்தனை காசு வாங்கினீர்கள்?''

''அது எனக்குத் தெரியாது. அவர்கள் ஆக்ராவில் இறங்கி விடுவார்கள்.''

''இது ரிஸர்வ்ட் கம்பார்ட்மெண்ட்.''

''அதை டி. டி. யிடம் சொல்லு. நாங்கள் 'புக்' செய்யாத சைக்கிள் பிடிக்கிறவர்கள்.''

''அந்த சர்தார்ஜி கூட சைக்கிள் வைத்திருக்கிறான்.''

''அதுக்கு?''

''அவனிடமும் அபராதம் வாங்கு. மதராஸிகளை மட்டும் ஏமாற்றாதே.''

''அவன் மெட்ராஸ்தான் போகிறான். மதராஸிகள் அங்கே அவனைக் கட்டாயம் பிடித்து விடுவார்கள்.''

''என்னிடம் அவ்வளவு காசு இல்லை.''

''நீயும் ஆக்ராவில் இறங்கிக் கொள். இல்லை, அம்பத்தி நாலு ரூபாய் கட்டி மெட்ராஸ் போ.''

கணேசன் பணத்தைக் கொடுத்தான். ஏதோ நிர்ப்பந்தத்தில் தன் சொத்து முழுவதையும் அந்த ஊழியர்களுக்கு எழுத வேண்டி வந்தது போலவிருந்தது அவனுக்கு.

''பதினாறு ரூபாய் தான் மிச்சம் என்னிடம். இரண்டு நாள் பிரயாணம் செய்ய வேண்டும். ஸ்டேஷனிலிருந்து வீடு போக வேண்டும்.''

''போ.'' அவர்கள் இறங்கிப் போய்விட்டார்கள்.

''என்னங்க?'' என்றாள் லலிதா. நடந்தவை ஆங்கிலத்தில் நடந்ததால் அவளுக்குப் புரியாமல் போய் விட்டது.

''வாயை மூடு.''

கையில் பதினாறு ரூபாய் தான் பாக்கி. நாளை முழுக்க லலிதாவுக்கும், சரவணனுக்கும் மட்டும் சாப்பாட்டுச் செலவு. கணேசன் சாப்பிட முடியாது. பெட்டியில் எல்லோருக்கும் கணேசன் கையில் பதினாறு ரூபாய் மட்டுமே இருப்பது தெரிந்து விட்டது. நாளை அவர்கள் சாப்பிடும் போது குற்ற உணர்வுடன் சாப்பிடுவார்கள். அப்படி சாப்பிடு கையில், ஜன்னல் வழியாய் குரல் கொடுக்கும் பிச்சைக்காரன் சங்கடம், கணேசன் மௌனத்தில் அவர்களுக்குத் தெரியும். முதலில் மெட்ராஸ் போனால் போதும். உலகத்தையே ஜெயித்து விடலாம்.

ஒரு பஞ்சாபி இளைஞன் கணேசனிடம் திடீரென்று கேட்டான். ''நிஜமாகவே ரூபாய் இல்லையா?''

''ஆமாம்.''

''உங்களுக்குப் பணம் வேணுமா?''

''ஏன்?''

''இல்லை. வேண்டுமானால் தருகிறேன். மெட்ராஸில் வாங்கிக் கொள்கிறேன்.''

கணேசன் தன்னிடம் பதினாறு ரூபாய் மட்டுமே இருந்ததற்கு விளக்கம் சொல்ல ஆரம்பித்தான். அவ்வாறு சொல்லுவதில்

---

கணவர்: அவனவன் சாப்பாட்டுக்கே வழியை காணோம். நம்மவீட்டை விட்டுத் துரத்தின இந்த நாயை மறுபடியும் எதுக்கு இழுத்துட்டு வந்தே?''

மனைவி: நான் இதை இழுத்துட்டு வரலீங்க. கடைவீதியிலே நின்னுட்டிருந்த என்னைத்தான் இது நம்ம வீட்டுக்கு இழுத்துட்டு வந்துது.

—பூ. பெருமாள்சாமி.



நூறு ரூபாயைப் பெற்றுக் கொண்டதன் யாசகத் தன்மை குறைவதாகத் தோன்றிற்று. இதை நம்பும்படியாகச் சொல்லுவதற்கு அவன் நிறையப் புளுக வேண்டியிருந்தது.

''உண்மையில், நான் டெல்லி போகும் போது நாலாயிரம் ரூபாய் கொண்டு போனேன்.''

''ஓஹோ.''

''நிறைய செலவு பண்ணிவிட்டேன். புடவைகள் மட்டும் ஆயிரம் ரூபாய்க்கு வாங்கினேன்.''

''அப்படியா?''

''நிறைய புத்தகங்கள் வாங்கினேன். பைரேட் எடிஷன் புத்தகங்கள். பத்து ரூபாய்க்கும், ஐந்து ரூபாய்க்கும் டெல்லியில் தான் புத்தகம் கிடைக்கிறது. ஆயிரம் ரூபாய்க்கு புத்தகம் மட்டுமே வாங்கினேன். அவை அந்தப் பெட்டியில் இருக்கின்றன.''

''நிறையப் படிப்பீர்கள் போலிருக்கிறது.'

''ஆமாம் நிறைய. அதனுல் தான் ஆயிரம் ரூபாய்க்கு வாங்கினேன். அவை அந்தப் பெட்டியில் தான் இருக்கின்றன.''

அந்தப் பெட்டி சின்ஹா கொடுத்தது. சின்ஹாவின் சகோதரன் சென்னையில் வாங்கிக் கொள்வான்.

''ஆக்ரா, மதுராவெல்லாம் பார்த்தேன். பூராவும் டாக்ஸியில். அது ஒரு ஆயிரம்.''

''உங்களுக்கு ஆக்ரா பிடித்திருந்ததா?''

''உம்.''

பஞ்சாபி இளைஞன் அயர்ந்திருக்கக்கூடும். கணேசன் தன் கையில் பதினறு ரூபாய் மட்டுமே இருந்ததற்கான காரணங்களைச் சொல்லியாயிற்று. அதெல்லாம் உண்மையாய் இருந்தால் லலிதா ரொம்பவும் சந்தோஷப்பட்டிருப்பாள். பாவம், ஒரு புடவையாவது வாங்கியிருக்கலாம். ஆக்ராவுக்காவது கூட்டிப் போயிருக்கலாம். செலவு, செலவு என்று சேணங்கட்டியாயிற்று. இங்கிலீஷ் தெரியாததற்காக திட்டு வேறு வாங்கி விட்டாள்.

கணேசன் லலிதாவைப் பார்த்தான். அவள் அவனேயே பார்த்துக் கொண்டிருந்தாள். பஞ்சாபி இளைஞனிடம் தான் அளந்த அளப்புக்கள் அவளுக்கு புரிந்து விட்டது என்று கணேசனுக்குத் தோன்றியது.

அவனுக்கு வெட்கமாய் இருந்தது.

---


# கல்கி

அடுத்த வாரம்:

## விண்வெளியில் இந்தியன்

இலவச இணைப்பு

## ஆரோக்கியம் அழைக்கிறது



பல்வேறு நோய்களே வராமல் தடுப்பது எப்படி, தப்பித்தவறி உடம்புக்கு வந்து விட்டால் என்னென்ன செய்யவேண்டும் என்று எளிமையாக ஆனல் விஞ்ஞான ரீதியாக விளக்கும் கையேடு. டாக்டர்களே எழுதி ஒரு டாக்டரே ஆசிரியராக இருந்து தொகுத்தளிக்கும் நிரந்தரப் பயன் தரும் ஆரோக்கிய அகராதி.

# ஜங்ஷனிலே ஒரு மேம்பாலம்

**18**

தூக்குவார்கள். வாங்கிக் கொள். தூற்றுவார்கள். கேட்டுக் கொள். புகழ்வார்கள். கவனித்துக் கொள். நெருங்குவார்கள். ஏற்றுக் கொள். புறக்கணிப்பார்கள். சகித்துக் கொள். ஒரு புல் போலக் கூடப் பொருட்படுத்த மாட்டார்கள். விடாதே. நீ யாரென்று காட்டு. நிரூபி. பொருட்படுத்தவில்லையென்றால் மட்டும் விடவே விடாதே.

பிலிப்ஸ் குத்துச் சண்டை கற்றுக்கொடுக்கும் போது அடிக்கடி சொல்லும் உபதேசம் அது.

எஸ்தரை வீடு வரையில் கொண்டுபோய் விட்டுவிட்டு வர வேண்டுமென்று முன்னால் நடக்கும் போது காசிக்கு அது ஞாபகம் வந்தது.

அவன் சந்திக்கிற ஒவ்வொருவரிடமும் தன்னை நிரூபித்துக் கொண்டிருந்தான். கேசவ நைனா, அவர் மனைவி மரகதம்மா, ஹரி, ஜெயா, வில்வம், எஸ்தர். மாத்யூ வாத்தியார் வரப்போகிறார். அவரிடமும் நிரூபித்துக் காட்ட வேண்டும். அதற்கு முன்னே எஞ்சினியர் பீட்டரிடம் நிரூபிக்க வேண்டும்.

''ஒங்க மாமா என்னை ரவுடின்னு நெனைக்கிறாரா?''

''இருக்கலாம்'' என்று பின்னாலிருந்து எஸ்தர் சொன்னாள்.

காசி திரும்பிப் பார்த்தான். பென்ஸிங் சட்டிகள் தைத்த வேலிக் கம்பிகளின் வழியாக கீழே சற்றுப் பள்ளத்திலிருந்து ஒரு க்வார்ட்டர்ஸ் வெளிச்சம் அவள் முகத்தின் மீது விழுந்தது. உடம்பிலும் சேலையிலும் கம்பிகளின் நிழல் விழ இடைவெளியில் விழுந்த வெளிச்சத்தின் கோலத்தில் எஸ்தர் மிகவும் அழகாகக் காணப்பட்டாள்.

அந்த நிமிஷத்தில் அவளை வாரித்தழுவித் தூக்கி ஒரு குதிரையில் வைத்துக் கொண்டு ஒரு நிலா வெளிச்சம் வீசுகின்ற காட்டுக்குப் போய் விட வேண்டுமென்று அவனுக்குள் ஒரு வேகம் வந்தது. ஒரு கணம் நீர்க்குமிழி மாதிரி அந்த வேகம் வானவில்லின் வர்ணங்களோடு மின்னிற்று. அடுத்த கணம் அது வெடித்தது.

'அதென்ன அப்படி ஓர் ஆசை... குதிரை மேல் வைத்து தூக்கிச் செல்ல... எப்போதோ பார்த்த இங்கிலீஷ் படம் நினைவு வந்தது.'

''எஸ்தர்'' என்றான்.

''முன்னாலே போங்க. விளக்கு வெளிச்சத்துக்கு வந்துட்டு...''

அவனுக்கு அவள் கண்களில் மின்னிய எண்ணத்தைப் படிக்க முடிந்தது. காசி உதட்டைக் கடித்துக் கொண்டான். அவள் சொன்னது முகத்தில் அடித்த மாதிரி இருந்தது.

அவள் உதட்டைக் கடிப்பதைப் பார்த்தான். ஓசையில்லாமல் வாயைப் பொத்திக் கொண்டு குலுங்கிச் சிரித்தாள். அவளது இளமையும், ஆரோக்கியமான அங்கங்களும் அந்த சிரிப்பின் அலையில் குலுங்குவது கண்ணுக்கு இனிமையாய்த் தோன்றிற்று.



''வாத்தியார் மகள், எஞ்சினியர் பீட்டருடைய அக்காப் பொண்ணு'' என்று அவள் ஏதோ பாட்டி கதை சொல்லும் பாணியில் அவன் சொன்னதைத் திருப்பிச் சொன்னாள்.

காசி அதற்குக் கண்களைச் சுருக்கிக் கொண்டே சிரித்தான்.

''நான் கேட்டதுக்குப் பதில்சொல்லு.''

''அதான் சொன்னேனே...''

''இப்ப வீட்டுக்கு வந்து அவரைப் பார்த்தா இன்னு சொல்வாரு.''

''போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன் பண்ணினாலும் பண்ணுவாரு.''

''பொய் சொல்றே அப்படிப்பட்டவர் ஒங்கப்பாவை வந்து கூட்டிக்கிட்டுப் போவச் சொல்லி லெட்டர் எழுத மாட்டாரு.''

''இப்ப மாமாவைப் பார்க்க வரப்போறீங்களா?''

''ஆமாம்.''

''இதோ இப்படித்தான் வழி.''

அவன் வேலியிருந்து சரிந்த ஒற்றையடிப் பாதை வேலி கட்டிகள் மூன்று நீக்கப்பட்ட இடைவெளியைச் சுட்டிக் காட்டினாள்.

''நீ எப்படிப்பட்டவள்னு எடை போட முடியலியே எஸ்தர்?''

''ஏன்?''

''கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி எல்லாத்தையும் ரொம்ப சீரியஸாக் கேட்டுக்கிட்டே. இப்ப அதையே தமாஷ் பண்றே?''

''பளுவை ஏன் மனசுலே சொமந்துகிட்டே இருக்கணும்? மூட்டையை அவுத்து அப்பப்ப ஒதறி விட்டுட்டா 'ஈஸி'யா இருக்காது?''

''அப்படி நெனச்சா பளுவே சொமக்காமே கால் போற போக்கிலே மனசு போற போக்கிலே போக வேண்டி வருமே...



சொகவாசி. ஆயிடுவோமே. ஒரு 'வெய்ட்' வேணும்?''

''மனசுக்குள்ளே மூட்டை கட்டி வச்சுக்கிணே இருந்தாதான் வெய்ட். புத்தி எங்கே போயிடும்?''

''சரி... நீ மொதல்லே ஏறங்கு...''

''வரத்தான் போறீங்களா...?''

''நிச்சயமா.''

''ஒங்க தலை விதி.''

எஸ்தர் சொன்ன மாதிரி பீட்டரைச் சந்தித்தது காசிக்குத் தலைவிதியாக இல்லை. வீட்டுக்கு வெளியே விளக்கு வெளிச்சத்தில் ஈஸிசேரில் படுத்துக் கொண்டு எதையோ படித்துக் கொண்டிருந்த பீட்டர் முதலில் எஸ்தரைப் பார்த்தார். அவர் கையிலிருந்த புத்தகம் கீழே கொஞ்சம் இறங்கிற்று. அடுத்து காசியைப் பார்த்தார். புத்தகத்தில் பக்கத்திலிருந்த டீப்பாயின் மேலிருந்து ஓர் அட்டையை வைத்து அதை மூடி வைத்து விட்டார்.

''குட் ஈவினிங் சார்!'' என்று காசி அவருக்கு வணக்கம் செய்தான்.

''நான் வரட்டுமா?'' என்று கூடத் துணைக்கு வந்தவனிடம் சொல்லிவிட்டு விடைபெறுகிறவள் மாதிரி எஸ்தர் படிக்கட்டில் ஏறி அவரைக் கடந்து உள்ளே போக முயன்றாள்.

'அவரை உள்ளே கூப்பிடும்மா....'' என்று பண்பாட்டை நினைவூட்டுவது போல் அவர் சொன்ன வார்த்தைகள் எஸ்தரை வழிமறித்தன. அவள் நின்று அவர் பக்கமாக முதுகைத் திருப்பிக் கொண்டு அவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு ம்ஹூம் என்று புருவத்தை உயர்த்தி, கண்களை மூடி, உதட்டைப் பிதுக்கி ஒரு பெருமூச்சை ஓசையில்லாமல் முக அசைவிலேயே காட்டினாள்.

காசி மனதுக்குள் சிரித்துக் கொண்டான்.

''கம் இன்... அவ கூப்பிடாட்டாப் போறா. உள்ளே வா.''

''நான் வர்றதை அவங்க விரும்பலே போலிருக்கு'' என்று அவன் அனுமதியை எதிர்பார்ப்பது போல் கௌரவமாகச் சொன்னான் காசி.

பீட்டர் மாமாவுக்கு நிச்சயம் தெரியப் போவதில்லை என்ற தைரியத்தில் எஸ்தர் காசியைப் பார்த்து 'வவ்வவ்வே' என்று ஒலி எழுப்பாமல் அழகு காட்டிவிட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டு உள்ளே போனாள்.

''கம் ஆன்... நான் கூப்பிடறேன் வா..''

காசி உள்ளே வந்தான்.

பீட்டர் ஸ்டூலின் மேல் வைத்திருந்த புத்தகத்தை எடுத்து மடியில் மாற்றிக் கொண்டார். கையைக் காட்டினார்.

காசிக்குப் புரிந்தது.

அவன் ஸ்டூலில் உட்கார்ந்தான்.

''எங்கே வாக்கிங் போயிட்டு வந்தீங்களா?''

அவன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''ஆமாம் சார்.''

''எது வரிக்கும் போனீங்க.''

அவர் தலைக்குப் பின்னாலிருந்த ஜன்னலை விரியத் திறந்து விட்டாள் எஸ்தர். லொட்டென்று சத்தம் கேட்டு காசி நிமிர்ந்தான்.

''லிஸ் பண்ற வரிக்கும்'' என்று அவன் அவருக்குச் சொல்ல வேண்டிய பதிலுக்கு தூண்டுகோல் தருவது போல ஓசை எழுப்பாமல் எஸ்தர் சொல்லிக் காட்டினாள். லிஸ்... என்ற வார்த்தைக்கு ஓர் அழுத்தம் அப்புறம் இடைவெளி. 'பண்ற' வுக்கு ஓர் அழுத்தம். இடைவெளி. அப்புறம் மற்றது.

காசி மீண்டும் தனக்குள் ஒரு சிரிப்பைப் புதைத்தான்.

''ஈஸ்ட் காபின் வரிக்கும்'' என்று காசி பதிலளித்தான்.

அவன் பார்வை ஜன்னலுக்குப் போனதையும் ஜன்னல் ஓசையையும் கவனித்தார் பீட்டர்.

''மேலே போலாமா... மொட்டை மாடிக்கு?''

''ஓ...''

அவர் நைட் கவுன் அணிந்திருந்தார். பைஜாமா தொளதொளவென்றிருந்தது.

''ஒனக்கு வேற வேலை ஏதாவது இருக்கா?''

''ஒண்ணுமில்லே...''

''அப்பசரி... கொஞ்சம் இரு...''

எஞ்சினியர் பீட்டர் உள்ளே போய் மடமடவென்று இங்கிலீஷில் யாரிடமோ ஏதோ சொல்லிவிட்டு வந்தார்.

பால்கனி ஓரமாகப் படிக்கட்டு. அவர் முன்னே போய் விளக்கைப் போட்டார். நேராக மேலே பச்சை பெயிண்ட் அடித்த இரட்டை மடிப்புக் கதவு. படிகள் கண்ணாப் பால் வைத்து வழுவழுவென்று இழைத்த அந்தக் காலத்து வேலைப்பாடு.

அவர் கதவைத் திறந்தார்.

ஏறும் போதே மேலேயிருந்து சில்லென்று காற்று வந்து அவன் முகத்தைத் தழுவி வரவேற்றது.

மொட்டை மாடியில் கறுப்புப் புள்ளிகளை வாரி இறைத்த மாதிரி காரைக்கல் வெய்யில் மழையில் வாங்கிய அடியின் வடுக்கள்.

இரண்டு பிரம்பு சேர். எதிரெதிரே போடப்பட்டிருந்தது. நடுவே ஒரு டீப்பாய்.

அவர் ஒன்றைக் காசிக்குச் சுட்டிக்காட்டி விட்டுத் தான் ஒன்றில் உட்கார்ந்தார். சற்று





## அருள்வாக்கு

எல்லாருக்கும் மனசு மிகவும் நன்றாக இருக்க முடியாது. இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டாலும் முடியவில்லை. வீட்டிலே இருக்கிற குழந்தை சதா ஏதோ விஷமம் பண்ணிக் கொண்டிருக்கிறது. கத்தரிக்கோலை எடுத்து நல்ல துணிகளை, முக்கியமான காகிதங்களை நறுக்கி விடுகிறது. செடிகளை வெட்டி விடுகிறது. இப்படி துஷ்டத்தனம் பண்ணுகிறது. அதையே பள்ளிக் கூடத்துக்கு அனுப்பிவிட்டால், 'இத்தனை மணிக்குப் போக வேண்டும். இன்ன இன்ன பாடங்களை அதற்குள் எழுதி விட வேண்டும், திரும்ப இத்தனை மணிக்குத்தான் வர முடியும். வந்தால் இதைச் செய்ய வேண்டும்' என்று அதற்கு ஒரு கட்டுப்பாடு வந்து விடுகிறது. முன்பு காணப்பட்ட விஷம குணங்கள் எங்கோ போய் விடுகின்றன. பள்ளிக்கூடம் இல்லை. லீவு நாள் என்றால் மறுபடியும் விஷம குணங்கள் தலைகாட்டுகின்றன. அதேபோல் நாம் கெட்ட எண்ணத்திலும், காரியத்திலும் ஈடுபட அவகாசம் இன்றி, நல்ல காரியங்களை ஒரு விதிப் பிரகாரம், ஒழுங்கு தப்பாமல் செய்வது தான் முக்கியம். இதற்குத்தான் சாஸ்திரங்கள் நமக்கு விதிகள் போட்டிருக்கின்றன.

நல்ல சீலங்கள் உண்டாக வேண்டுமென்றால் துர்க்குணங்கள் நிவிருத்தியாக வேண்டும். 'துர்க்குணங்கள் நிவிருத்தியாக நல்ல கர்மானுஷ்டானங்களைச் செய், பூஜை பண்ணு. (சகல ஜீவராசிகளுக்கும் ஆகாரம் கொடுப்பதான) வைச்வதேவம் பண்ணு.' அதிதிகள் வந்தால் ஸத்காரம் (விருந்தோம்பல்) பண்ணு' என்று பல விஷயங்களைச் செய்யச் சொல்கிறது சாஸ்திரம். இதன்படி செய்து வந்தால் கெட்ட காரியங்களுக்கு நேரமே இல்லாமல் போய்விடும். கர்மானுஷ்டானங்களைப் பண்ணுகிறபோதும் 'நாம் பண்ணுகிறோம்' என்ற அகம்பாவத்தோடு பண்ணக் கூடாது. பண்ணக்கூடிய சக்தியை நமக்கு ஈச்வரன் கொடுத்தான், பண்ண வேண்டும் என்ற புத்தியைக் கொடுத்தான், அதற்கு வசதியும் கொடுத்தான் என்று நினைத்து ஈசுவரார்ப்பணமாகப் பண்ணு என்று நமது வைதிக மதாச்சாரியர்கள் விதித்து வழிகாட்டினார்கள்.

**-ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

---

நேரத்தில் ஒரு வேலைக்காரன் பெரிய ட்ரேயை ஏந்திக் கொண்டு வந்தான். அதில் இரண்டு தட்டுக்களில் சிப்ஸ் இருந்தது. வேலைக்காரன் மீண்டும் ஒரு தடவை கீழே போய் சோடாபாட்டில்களை வைக்கும் ஒரு கிரேட்டைக் கொண்டு வந்தான்.

அதில் நாலைந்து மூடி போட்ட சோடாக்கள். ஒரு நீள விஸ்கிப்புட்டி. இரண்டு எவர்சில்வர் டம்ளர்கள் என்று ஒரு பட்டியல் இருந்தது.

அந்த வேலைக்காரன் எவர்சில்வர் டம்ளர்களை இருவருக்கும் நேராக வைத்தான்.

''நான் குடிக்கிறதில்லே'' என்றான் காசி.

''நெஜம்மாவா... இல்லே ஒரு மரியாதைக்குச் சொல்றியா?''

''உண்மையா...''

பீட்டர் உதட்டைப் பிதுக்கி சுத்த மோசம் என்று தெரிவிக்கிற மாதிரி தலையை ஆட்டினார்.

''ஆல்ரைட்... ரங்கா... கீழே போயி ஆரஞ்சு ஸ்க்வாஷ் பாட்டிலை எடுத்தா.''

வேலைக்காரன் இன்னொரு முறை தனக்காகக் கீழே இறங்குவது காசிக்குப் பிடிக்கவில்லை.

''எனக்கு வெறும் சோடா போதும் சார்..''

''ஆல்ரைட்... சோடா மட்டும் கொடு ரங்கா.''

ரங்கன் ஒன்றில் விஸ்கியையும் மற்றொன்றில் சோடாவையும் நிரப்பினான்.

''சரி நீ போ'' என்று அவனைக் கீழே அனுப்பினார் பீட்டர். ரங்கன் போனதும் அவர் விஸ்கி டம்ளரை எடுத்து மெல்ல ஓர் உறிஞ்சு உறிஞ்சினார்.

காசி சோடாவைக் குடித்தான்.

''நீ ஃபயர்மேன் கேசவன் வளர்த்த புள்ளை இல்லே.''

''ஆம்'' என்று அவன் தலையசைத்தான்.

''தங்கமானவர் அந்த ஆள். திருச்சி டிவிஷன்லே கொஞ்ச நாள் வேலை செஞ்சப்போ எனக்குத் தெரியும்...'' பீட்டர் விறுவிறுவென்று கிளாஸிலிருந்த விஸ்கியை விழுங்கிவிட்டு, 'ம்க்கும்' என்று தொண்டையைச் செருமினார்.

''சுத்தி வளைக்காமே நேரடியா விஷயத்துக்கு வரலாம் காசி'' என்றார்.

காசி புன்முறுவலோடு தலையை ஆட்டினான்.

''எஸ்தர் ஒன்னை லவ் பண்றா. இல்லியா?''

''ஆமாம்.''

''நாங்க கிறிஸ்தவங்க. நீ இந்து. நாங்க வசதியானவங்க. நீ ஒரு சைக்கிள் ஷாப் ஓனர்தான். இந்த வித்தியாசத்தை யெல்லாம் யோசித்துப் பார்த்தாயா?'' என்று கேட்டார் அவர்.

(தொடரும்)




ஃபோட்டோ பேஜ்

ஒவ்வொரு வருடமும் 70 மில்லியன் குழந்தைகளின் உயிரைக் காப்பாற்றி மேலும் பல மில்லியன் குழந்தைகளின் ஆரோக்கியத்தையும் பேணுவதற்கான திட்டங்களை வகுத்துள்ளது யுனிசெஃப். உலகெங்கும் இத்திட்டங்களுக்குச் சிறந்த ஆதரவு கிடைத்து வருகிறது.

சில தகவல்கள்:

ஒரு குழந்தைக்கும் அடுத்த குழந்தைக்கும் இடையே போதிய இடைவெளி இல்லாவிட்டால் தாய், சேய் இருவருக்கும் அபாயம் அதிகம்.

| இடைவெளி | உயிரிழக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை (ஆயிரத்துக்கு) |
|---|---|
| 1 வருடத்துக்குக் குறைவு | 200 |
| 1—2 வருடங்கள் | 145 |
| 2—3 ,, | 100 |
| 3—4 ,, | 80 |

(தென்னிந்தியாவில் நடத்திய ஆய்விலிருந்து)

நிறையக் குழந்தைகள் பெற்றுக் கொள்வதும் ஆரோக்கியத்துக்கு உகந்ததல்ல:

| பெற்றுக் கொள்ளும் குழந்தைகளின் எண்ணிக்கை | உயிரிழக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை (ஆயிரத்துக்கு) |
|---|---|
| 5 | 160 |
| 4 | 85 |
| 3 | 80 |
| 2 | 70 |
| 1 | 60 |

(எல் சால்வடாரில் நடத்திய ஆய்விலிருந்து)

தாயின் வயது குழந்தையின் ஆரோக்கியத்தைப் பாதிக்கும் என்றும் கண்டறிந்துள்ளனர்.

| தாயின் வயது | உயிரிழக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை (ஆயிரத்துக்கு) |
|---|---|
| 20க்குக் கீழ் | 130 |
| 20–24 | 75 |
| 25–29 | 6[illegible] |
| 30–34 | 70 |

(அர்ஜென்டீனாவில் நடத்திய ஆய்விலிருந்து

## ருஷ்யச் சிரிப்பு







# எதிர் பாராத ஏமாற்றங்கள்

அந்தப் போர்டரின் பார்வையில் ஒரு அலட்சியமும் எத்தனை கறக்கலாம் என்கிற நோட்டமும் தெரிந்தன.

''எத்தனை!'' என்றுகேட்டேன்.

''இரண்டு டாலர்! அதற்கு மேல் கொடுத்தாலும் வாங்கிக் கொள்வேன்!''

''பத்தடிக்கு இருபது ரூபாய்'' என்று எனக்குள் சொல்லியபடி இரண்டு டாலரை நீட்டினேன். அவருடன் வாதாட அப்பொழுது சமயமில்லை என்று — நியூயார்க்கில் என்னைச் சந்திக்க வருவதாகச் சொல்லியிருந்த என் சகோதரனைத் தேடுவதில் நான் கவனமாயிருந்தேன்.

அண்ணனைக் கண்டுபிடித்ததும் பரஸ்பரம் குசலம் விசாரித்து முடித்ததும் நான் பரபரப்புடன் சொன்னேன்.

''சித்த முன்னே என்ன ஆச்சு தெரியுமோ. ஒரு நீக்ரோ...''

○ சுதந்திரதேவி சிலை



''உஷ்!'' என்று அடக்கினார் அண்ணா. ''அந்த வார்த்தையைச் சொல்லாதே! சண்டைக்கு வருவார்கள். ப்ளாக் என்றுதான் சொல்லணும்!''

அடுத்த இரண்டு மணி நேரத்தில் நாங்கள் டெட்ராய்ட் செல்லும் விமானத்தில் புறப்பட வேண்டியிருந்தது. டெட்ராய்டுக்குப் பக்கத்தில் ஆன் ஆர்பர் என்ற இடத்தில் அண்ணாவுக்கு வேலை.

அந்த இரண்டு மணிநேர இடைவெளியில் நான் எனது ஐரோப்பிய பயண அனுபவங்களைப் பற்றியும் இன்னும் பல விஷயங்களையும் சொல்லிக் கொண்டு போனேன். இந்திய அரசியல் நிலை எப்படியிருக்கிறது என்று கேட்ட அண்ணாவுக்கு நான் விவரித்துக் கொண்டு வருகையில் பேச்சு வாக்கில் 'கம்யூனிஸ்ட்' என்கிற வார்த்தை வந்தது. அண்ணா அந்தண்டை இந்தண்டை பார்த்து ''அந்த வார்த்தையை இங்கு பலக்கச் சொல்லாதே. இவர்களுக்கு அலர்ஜி'' என்றார்.

'இதென்னடா வம்பு' என்று ஆச்சரியமாயிருந்தது எனக்கு. 'உலகத்திலேயே மிகச் சுதந்திரமான நாடு இது!' என்று சொல்வதற்கு என்ன அர்த்தம் என்று நினைத்துச் சிரிப்பு வந்தது. அதற்குப் பிறகு நான் என் பேச்சில்வார்த்தைகளைக் கவனமாகக் கோக்க ஆரம்பித்தேன்.

எட்டேகாலுக்குக் கிளம்ப வேண்டிய விமானம் நிதானமாக ஒன்பதரை மணிக்குக் கிளம்பிற்று.

'உள் நாட்டு விமான ஸர்விஸ்ஸில் எப்படிவேண்டுமானாலும் நடக்கும்' என்று அண்ணா சிரித்தார் என் வியப்பைப் பார்த்து.

சாமானை ஏற்றுவதற்கு முன் டிக்கெட்டைக் காண்பிக்கும் இடத்தில் அண்ணா பிரத்யேகமாகக் கேட்டுக் கொண்டார்.

''எங்களுக்கு 'நான்—ஸ்மோக்கிங்' பகுதியில் ஜன்னல் புறத்து ஸீட்டுகள் வேண்டும். என் தங்கை முதல் முறையாக அமெரிக்கா வருகிறாள். இரவில் நியூயார்க்கின் அழகிய ஏரியல் வியூவைக் காண்பிக்க ஆசைப்படுகிறேன்.''

''ஓ ஷ்யூர்!'' என்று அங்கு உட்கார்ந்திருந்த பெண்மணி வெகு அழகாக சிரித்தார்.

''நான் டெட்ராய்டிலிருந்து நியூயார்க்கிற்கு நேற்று வந்தேன். எனக்கு 'நான் — ஸ்மோக்கிங்' இடம் வேண்டுமென்றேன். ஸ்மோக்கிங் பகுதியில் நட்ட நடுவில் உட்கார்த்தி விட்டார்கள். எனக்குப் புகை ஒத்துக் கொள்ளாது. ஒரே தலைவலி வந்து விட்டது!'' என்றார் அன்னா.

''அந்த மாதிரி தவறு இப்பொழுது நடக்காது!''

''ஜன்னல் ஸீட்! ஞாபகமிருக்கட்டும்!''

''ஷ்யூர்.''

நாங்கள் விமானமேறினோம். மூன்று நீள வரிசைகளாக ஓடிய ஸீட்களில் எங்களுக்குக் கொடுக்கப்பட்ட ஸீட்டுகள் நட்டநடு வரிசையில். எங்கள் ஸீட்டுக்கு முன் ஒரு தடுப்புச் சுவர் வேறு.

''இவர்களை என்ன செய்வது?'' என்று அன்னா அலுத்துக் கொண்டார். 'நம்ம ஊர் ஜனங்களே தேவலை', என்கிற அல்ப திருப்தி ஏற்பட்டதுஎனக்கு. ஜன்னல் ஓரமாக நிறைய காலி ஸீட்கள் இருந்தன. போய் உட்கார்ந்துமேலிருந்து நியூயார்க்கின் இரவு அழகை ரசித்தேன்.

மிச்சிகன் பல்கலைக் கழகத்தின் இருப்பிடமான ஆன் ஆர்பர் மிக அழகியஅமைதியான ஊர். நான் சென்ற சமயம். இலையுதிர் பருவத்தின் ஆரம்பம். அமெரிக்கர்கள் ஆடம் (Autumn) என்பதை எளிமையாக ஃபால் (Fall) என்கிறார்கள். மரங்களின் பச்சை இலைகள் எல்லாம் நிறம் மாறி இளம் மஞ்சள், சிவப்பு, ஆரஞ்சாகக் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. இந்த இலையுதிர் காலத்து அழகு அமெரிக்காவிற்குப் பிரத்தியேகமானது என்கிறார்கள். பருவத்தின் ஆரம்பத்தில் அமெரிக்கப் பத்திரிகைகளிலெல்லாம் எழுத்தாளர்கள், கவிகள் இயற்கை அழகைக் கண்டு பரவசப்பட்டுப் போனதின் பாதிப்புத் தெரிந்தது.

அமெரிக்காவில் பலமாடிக் கட்டிடங்கள்





ரஷ்மோர் மலையில் முன்னாள் அமெரிக்க ஜனாதிபதிகளின் சிற்ப உருவங்கள்

இரண்டு நாட்கள் வீட்டில் உட்கார்ந்து ஓய்வெடுத்து, காலையிலிருந்து இரவு வரை டி.வி. நிகழ்ச்சிகளைப் பார்த்து புத்தகக் கட்டுப்போல் விழும் செய்தித் தாளைப் படித்து பிரும்மாண்டமான ஷாப்பிங் ஸெண்டர்களுக்குச் சென்று பார்த்ததையெல்லாம் வாங்கத் தூண்டிய சாமான்களைப் பொறுக்கியெடுத்து வாங்கி கால்வலியுடன் வீடு திரும்பி — மூன்றும் நாளே எனக்கு அலுத்து விட்டது.

அவர்களது டி.வி. நுண்கலைக்கும் நமது நுண்கலைக்கும் மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசம் தெரிகிறது. பி.பி.ஸி. டி.வி. நிகழ்ச்சிகளை ரசிக்க அளவு என்னால் அமெரிக்க நிகழ்ச்சிகளை ரசிக்க முடியவில்லை. தூரத்தில் இருக்க வித்தியாசம் மாத்திரம் காரணமில்லை. அதிலிருந்த வியாபாரத்தனம் என்னுடைய மனநிலைக்கு ஏற்றதாக இருக்கவில்லை. நிலையத்தார்களின் மேல் தப்பில்லைதான். அமெரிக்க சமூகம் வியாபார ரீதியிலேயே சிந்திப்பதால் டி.வி.யும் அதைப் பிரதிபலிக்கத்தான் செய்யும். விளம்பரங்களையே மூலதனமாகக் கொண்டு இயங்கும் தனியார் டி.வி. நிலையங்களானதால் ஒரு செய்தி அறிக்கையைக் கூடச் சேர்ந்தாற் போல் கேட்க முடியாது. இரண்டு நிமிஷங்களுக்கு ஒரு விளம்பரம் வந்து கொண்டேயிருக்கும். ஆனால் அவர்களது அறிவிப்புகளில்-

— வாஸந்தி —

-முக்கியமாக வானிலே அறிவிப்பில் - இருக்கும் ஒரு சினேகிதச் சரளம் என்னை மிகவும் கவர்ந்தது. உ-ம். ''இன்று மழை பெய்யலாம். நான் நீங்களாக இருந்தால் இன்று குடையில்லாமல் வீட்டுப் படியிறங்க மாட்டேன்!''

நாடக இலக்கணத்தின் படி மேடை நாடகம், டி. வி. நாடகம், சினிமா மூன்றிற்கும் வித்தியாசம் உண்டு — இருக்க வேண்டும். இந்தியாவில் டி. வி. நாடகம் மோசமான மேடை நாடகம் போல் இருக்கிறது. அமெரிக்காவில் சினிமாவைப் போல் இருக்கிறது! 'டி. வி. ஷோஸ்' என்கிறார்கள். பிரும்மாண்டமான தயாரிப்புகள் காலையிலிருந்து இரவு வரை ஒன்று மாற்றி ஒன்றாகப் பல சானல்களில். 'ஸோப் ஆப்பரா' எனப்படும் ஸெண்டிமெண்டல் தொடர் சித்திரங்கள், காதல் துப்பறியும் நவீனங்கள்! 'தி ஜெனரல் ஹாஸ்பிடல்' என்ற ஒரு தொடர் முப்பது வருஷங்களுக்கு மேலாக வந்து கொண்டிருக்கிறது. சில அபத்தமான மந்திர தந்திர ஸ்டண்ட் படங்களும் உண்டு. மாக்ஸ் ஹாஸ்டன் என்ற ஒரு கதாநாயக நடிகரை அமெரிக்க எம். ஜி. ஆர். என்று சொல்லலாம் போல் இருந்தது. நாள் முழுவதும் இங்கு டி.வி.யைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பவர்களுக்கு மூளை மழுங்காமல் என்ன செய்யும் என்று நினைத்து எனக்குப் பரிதாபமேற்பட்டது!

ஒவ்வொரு தயாரிப்புக்கும் பல லட்சங்கள் செலவழிப்பார்கள் என்று தோன்றிற்று. பணம் என்பது லட்சியமே இல்லை இங்கு. நம் டி. வி. நிலையங்கள் பாவம் ஒரு அவுட்டோர் ஷூட்டிங்குக்குக் கூட யோசிக்கும் நிலையில் இருப்பதற்கும், இதற்கும் எத்தனை வித்தியாசம் என்று என் நினைவில் உறுத்திக் கொண்டிருந்தது. வியட்நாம் போரைப் பற்றின மிகத் தத்ரூபமான அற்புதத் தொடர் சித்திரத்தின் சில பகுதிகளைப் பார்க்க நேர்ந்தது. சிந்தனையைக் கிளறி மனிதாபிமானத்தைத் தூண்டும் சோகச் சரித்திரம்.

அமெரிக்க டி. வி. நிலையத்தாரின் துணிச்சலையும் அவர்களுக்கு அமெரிக்க அரசாங்கம் அளித்திருந்த சுதந்திரத்தையும் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

இந்த வியட்நாம் சித்திரம் முழுக்க முழுக்க அமெரிக்காவிற்கு அவப்பெயர் தரக் கூடியது. அமெரிக்க அரசின் யோசனையற்ற வெளிநாட்டுக் கொள்கையினால் ஒரு குற்றமற்ற சமுதாயம் அழிந்து வரும் சோகத்தை எடுத்துக்காட்டும் மனிதச் சித்திரம். அந்தத் திமிர்க் கொள் கையை எதிர்த்து அந்த நலிந்த சமுதாயத்தின் பிஞ்சும் குளுவானும் கூனும் முடமும் ஆக்ரோஷத்துடன் போராடத் துணிந்த நிரைக் கதை.

கிரெனேடாவில் திடீரென்று அமெரிக்க ராணுவத்தார் நுழைந்து ஆக்ரமித்தது நான் அங்கு இருந்த சமயத்தில். இந்தச் சம்பவம் அமெரிக்கப் பத்திரிகை—மீடியா உலகத்தைத் திடுக்கிடச் செய்தது துல்லியமாகத் தெரிந்தது. டி. வி. யில் காலை நிகழ்ச்சிகளில் இருந்து அந்த ஆக்ரமிப்பைக் கண்டனம் செய்து நிறைய வாக்குவாதங்கள் தொடர்ந்து நடக்கும். ரீகன் செய்தது தவறு என்றும் ஏமாற்றல் என்றும் லெபனானுக்குச் செல்லும் படைக்கப்பல் என்று சொல்லி கிரெனேடா அனுப்பிவிட்டார் என்றும் பிய்த்துஉதறினார்கள். அன்று இரவு ரீகன் டி. வி. மூலம் அமெரிக்க மக்களுக்குத் தன்னைத்தெளிவுபடுத்தினார்.

அவர் எத்தனை சிறந்த நடிகர் என்று நான் அசந்து போனேன். அங்கெல்லாம் டி. வி. பேச்

---



கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனுக்கு அவர் பிறந்த ஊராகிய நாகர் கோவிலில் ஒரு பெரும் வரவேற்பு.

குறிப்பிட்ட நேரத்தில் கலைவாணர் வந்து அங்கு தரையில் அமர்ந்திருந்த தம் பழைய நண்பர் ஒருவரைக் கண்டு அவர் பக்கத்தில் அமர்ந்து கொண்டார்.

நண்பர் வியப்படைந்து கலைவாணரிடம், ''என்ன நீங்க இங்கே வந்து உட்கார்ந்துட்டீங்களே, மேடையில் உங்களுக்குரிய ஆசனத்தில் அமருங்கள்'' என்று வேண்டிக் கொண்டார்.

உடனே, கலைவாணர் ''அதெல்லாம் நிலையான இடமில்லை. இதுதான் (பூமியைக் கையால் தட்டிக் காட்டிய படியே) நிலையான இடம். கடைசிக் காலத்தில் இதில் தான் வந்து சேர வேண்டும்'' என்றார்.

—வீ. கோபிநாத்.

'மார்க்குவேஸ்' என்னும் ஒரு தீவு இருக்கிறது. அத்தீவில் நடக்கும் திருமணத்தில் ஒரு விந்தையான பழக்கம் உண்டு. மணமகன் மேடைக்குச் செல்லும் வழியில் மண விழாவிற்கு வந்திருந்த ஆண் விருந்தாளிகள் வரிசையாகக் குப்புறப் படுத்துக் கொள்வார்கள். அவர்களின் மேல் மணமகன் நடந்து சென்று மேடையை அடைவான்.

தகவல்: ஜா. ரவி.
ஆதாரம்; உலகத் திருமணங்கள்.



சாளர் பேப்பரைக் கையில் வைத்துப் பார்த்துப்படிப்பதில்லை. பேச்சாளரின் எதிரில் பலகையில் (நமக்குக் கண்ணுக்குத் தெரியாது.) வரிகள் ஓட அதைப்படித்துக் கொண்டு போவதில் நம்மை பார்த்துப் பேசுவது போலப் பிரமை ஏற்படுகிறது. நடிகராக இருந்த தேர்ச்சியினால் ரீகனின் பேச்சு அவருக்கு முழு வெற்றியை அளித்தது. வார்த்தைகளின் நயமும் கவனமான உச்சரிப்பும் அதற்கேற்ற குரலும் ''நான் அமெரிக்கர்களின் சௌரவத்தைக் காப்பாற்ற இதைச் செய்தேன். நமது ரத்தத்தின் ரத்தம் (நமக்குப் பழக்கப்பட்ட வார்த்தைகள்!) கிரெனேடாவில் படும் கஷ்டத்தைப் போக்க இதைச் செய்தேன்'' என்ற பேச்சும் நிச்சயம் அமெரிக்காவைத் தவிர வேறு எதைப் பற்றிய பொது அறிவும் இல்லாத சராசரி அமெரிக்கனைச் சமாதானப்படுத்தியிருக்கும்.

செய்தித் தாள்களில் கண்டனக் குரல்கள் இடையிடையே கேட்டன. நியூயார்க்கில் கண்டன ஊர்வலங்கள் சென்றன. ஆனால் மற்றபடி அமெரிக்கர்கள் தீவிரமான எதிர்ப்புத் தெரிவித்தாற்போல் எனக்குப் படவில்லை. கிரெனேடா ஆக்கிரமிப்பு சமயத்தில் கூட 'வியட்நாம் போர்' பற்றின சித்திரத் தொடரைத் தொடர்ந்து காட்டியது எனக்கு ஒரு பக்கம் வியப்பாகவும், இந்தத்தொடரை பார்க்கும் அமெரிக்கர்களுக்குப் பாதிப்பு ஏற்படவில்லையா என்று ஒரு பக்கம் ஏமாற்றமும் ஏற்பட்டன.

உண்ணவும், உடுக்கவும் அபரிமிதமாக இருக்கும் நிலையில் ஒரு சராசரி அமெரிக்கப் பிரஜையின் உலகம் சிறுத்துப் போனது ஒரு இயல்பான தேக்கமாக இருக்க வேண்டும் என்று நான் நினைத்துக் கொண்டேன். அதீதமான ஏழ்மையில் மனித நேயம் புதையுண்டு போவது போல் அசாதாரண சுபிட்சத்திலும் கிட்டத்தட்ட அந்தக் கதிதான் ஏற்படுமோவென்று தோன்றிற்று.

அமெரிக்க விஷயங்களைத் தவிர வேறு விஷயமே அமெரிக்கப் பத்திரிகைகளிலும் தினசரிகளிலும் சாதாரணமாகத் தென்படவில்லை. ரஷ்யாவைப் பற்றின கண்டனத்தைத் தவிர வெளிநாட்டு நடப்பைப் பற்றி எந்த விவரமும் இல்லை. முக்கியமாக இந்தியாவைப் பற்றி ஒரு வரிச் செய்தி கிடையாது. எனக்கு அதிர்ச்சி தந்த விஷயம், அங்கு குடியேறி ஊறிப் போய் விட்ட நமது இந்தியர்களுக்கும் (பொதுப்படையாகக் கூறுகிறேன்.) இந்திய செய்தியை அறிய ஆவலைக் காணோம். இந்தியாவிலிருந்து மிகத் தொலைவுக்குச் சென்று விட்டாற் போல் முதல் முறையாக என்னுள் ஏக்கம் படர்ந்தது. அந்தச் சமூகம் ஏன் இப்படி ஒரு மெதப்பான திருப்தியில் இருக்கிறது என்று ஒரு இனம்புரியாத ஆத்திரம் ஏற்பட்டது. இந்த ஏமாற்றத்திலிருந்து விடுபட, உலகப் பிரசித்தமான மிக்சிகன் பல்கலைக் கழகத்தைப் பார்க்கக் கிளம்பினேன். என்னுடைய எதிர்பார்ப்பு வீணாகவில்லை. அது ஒரு பெரிய இனிய ஆச்சரியம்.

அதன் ஆசிய மொழிப் பிரிவுடன் தொடர்பு கொண்டு அங்கு பணிபுரியும் திரு. தேஷ்பாண்டேயையும், திரு. சர்மாவையும் சந்தித்தேன். திருசர்மா இருபத்தி நான்கு வருஷங்களாக அமெரிக்காவில் இருக்கிறார். பாகிஸ்தானிலிருந்து இந்தியாவுக்கு அகதியாய் வந்தவர். 'பிறந்த மண்ணிலிருந்து விலக்கப்பட்டபின் எனக்கு எங்கிருந்தாலும் ஒன்றுதான். நான் இந்தியனானாலும் என்னுடைய வேர்கள் இந்தியாவில் இல்லை' என்றார். அமெரிக்க வாழ்வுடன் ஒன்றி திருப்தியுடன் தெரிந்தார். அங்கு ஸம்ஸ்கிருதம் பயில்விக்கும் திரு. தேஷ்பாண்டே ஒரு படைப்பிலக்கியவாதியும் கூட. அமெரிக்கச் சூழலில் எல்லா வசதியும் இருந்தும் முன்புபோல் கவிதைகள் புனைய முடியவில்லை' என்று வருத்தப்பட்டார். 'இங்கு கிடைக்கும் நல்ல சம்பளமும் வாழ்க்கை வசதியும் இந்தியாவில் எனக்குக் கிடைக்காது. அதனால் இந்தியாவுக்குத் திரும்பும் உத்தேசமில்லை' என்றார். ஆனால் இந்தியாவுக்கு வந்து தங்கவேண்டும் என்ற தீவிர ஆர்வம் அங்கு நான் சந்தித்த ஒரு அமெரிக்கருக்கு இருந்தது!

(தொடரும்)



## 1

என்னை உங்களுக்குத் தெரியாது.

'மாணிக்கம்' என்றதும் அடையாளம் புரியுமளவுக்கு நான் பிரபலமில்லை.

'சராசரி மனிதன்' என்று ஒப்புக் கொள் வதில் எனக்கு ஒரு தயக்கம் உண்டு. காரணம் —

மற்றவர்களிடமிருக்கும் சாதாரண குணதிசயங்கள் — அபிலாஷைகள் என்னிட மில்லை. ஆனால் அதே சமயம்—

மற்றவர்களிடம் இருக்காத, இருக்கக் கூடாத விபரீத ஆசைகள் என்னிடம் நிறைய உண்டு.

சிகரெட்டைப் புகைத்து உதட்டையும் பற்களையும் களங்கப்படுத்திக் கொள்ள மாட் டேன். சாராயம், ஒயின் ஷாப் கடை வாச லில் நின்று நித்தம் தவம் செய்ய மாட் டேன்.

''டயம் என்ன சார்?'' என்று இருட்டில் நெருங்கி ரகசியமாக கிசுகிசுக்கும் சின்ன ஜாதிப் பெண்களிடம் 'எவ்வளவ்?' என்று பேரம் பேச மாட்டேன். சென்னை கிண்டி யில் ஏதோ பந்தயம் நடக்கிறதாமே! அது என்ன சார்?

வீடியோவில் சட்ட விரோதமான படங் களையும் பார்த்து மனசையும் உடம்பையும் நாசமாக்கிக் கொள்ள மாட்டேன்.

காரணம் — இதெல்லாம் சாதாரண மனி தர்களுக்கு வரும் ஆர்டினரி ஆசைகள்.

நான் வித்தியாசமான ஆள். சாமானியர் களுக்கு வரக் கூடாத ஆசைகளாகத்தான் எனக்கு வரும். (உங்கள் கைகுட்டை, பேனா, பத்திரம் சார். எனக்கு திருடுவது மிகவும் பிடிக்கும்.)

என்னிடம் 'உயிரோடிருக்கிறீயா?' என்று கேட்டுப் பாருங்கள். ''இல்லையே, நான் செத்தவன்'' என்றுதான் சொல்வேன். ஏனெனில் எனக்குப் பொய் சொல்வது ஹாபி. பிடித்தமான சங்கதி. ரொம்பவும் பிடித்தமானசங்கதி. கற்பனை சக்தி மிக அதிகம்.

**மர்ம நாவல்**

இப்போது எனக்கு வந்திருக்கும் ஆசை தான் மிகப் பெரிது புதியது.

கொலை செய்து பார்த்தால் என்ன?

முன்பின் தெரியாத ஒரு பெண்ணை — எதிர்க்க வலுவில்லாத ஒருபெண்ணைக் கொஞ்சம் கொஞ்சமாக வதைத்து அவள் சாவதைப் பார்த்தால் எப்படி இருக்கும்?

தீர்மானத்துக்கு வந்ததும் உற்சாகம் வந்தது. 'முன்பின் தெரியாத' என்ற வார்த்தையை அடிக் கோடிடவும். ஏனென் றால் நானே மாட்டிக் கொண்டாலும் கூட 'மோடிவ்' என்கிற ஆங்கில வார்த்தை என்னைக் காப்பாற்றி விடும்.

'தற்செயல்' என்று யாரையும் ஏமாற்ற நான் தயாராயில்லை.

காரணம் எனக்கே தெரியும். திட்ட மிட்டு, துல்லியமாக கணித்து நேரம் தவறாமல் நான் செய்யப் போகும் கொலை இது. அப்படித்தான் இந்த நிமிடம் வரை நினைக்கிறேன்.

கல்லூரியில் எனக்குப் பிடித்தமான பாடம் கணிதம். அதனால் நன்றாக திட்ட மிட்டு முடியும். என்னால் முடியும்.

சென்னை போலீஸ் என்ன? அந்த ஸ்காட்லாண்ட் யார்டுக்காரர்களே வந்து நின்று எனக்கு முன்னால் நின்று சுட்டு விரலை நீட்ட முடியாது — 'நீ' என்று.

அவ்வளவு நேர்த்தியாக என்னால் செய்ய முடியும். எத்தனை சதம்? நூறு சதம்.

மாலையானால் மெரினா பஸ் ஸ்டாண் டில் என்னைப் பார்க்கலாம். பத்தடி தூரத் தில் வரும்போதே என் இன்டிமேட் சென்ட் என்னை அடையாளம் காட்டிவிடும். — வர வேற்கும்.

எதிர்பார்ப்புடன்காத்திருக்கிறேன் நான். ஆனால்—

பஸ்சுக்காகக் காத்துக் கிடக்க வேண்டிய ஜாதி இல்லை நான். பெரிய இடத்துப் பிள்ளை. கொழுத்த பணக்கார இனம்.

என் தாத்தா புத்திசாலி. நாற் பத்தி இரண்டில் குண்டு வீச்சுக்குப் பயந்து ஊரை விட்டு ஓடியவர்கள் வந்த விலைக்குத் தள்ளி விட்ட வீடு களையும் மனைகளையும் நிறைய வாங்கி வைத்திருந்தார்.

நகரத்துக்குள் நில உச்ச வரம்புச் சட்டம் எட்டிப் பார்த்ததும் என் அப்பா பெற்று வைத்த நிறைய அக்காமார்களுக்கு ஆளுக்கு இரண்டு வீடு என்று பிரித்துக் கொடுத்து விட்டார். இன்றைக்கும் என் அத்திம்பேர்கள் என் அப்பா நின்றால் உட்கார மாட்டார்கள். (நன்றி)



# நின்று-பின்-தொட(ர்)வும்

**ராஜேந்திரகுமார்**

எனக்குத் தனிமையில் விருப்பம் அதிகம். அதனால் தான் கல்யாணத்தை இரண்டு வருஷங்களுக்குத் தள்ளிப் போட்டுவிட்டேன். தனிமைக்கு ஆசைப்பட்டே ஊருக்குவெளியே ஒரு தோட்டத்தில் பர்ண சாலையை அமைத்திருக்கிறேன். பர்ண சாலை என்றதும் குடிசை என்று நினைத்து' விடாதீர்கள். அந்தக் கீற்றுக் கொட்டகைக்குள்ளே காரணமில்லாமல் ரெட்டைக் கட்டில் உள்பட நிறைய பர்னிச்சர்கள் உண்டு. குளுமை சாதனம் அமைக்கப்பட்ட குடிசையைப் பார்த்திருக்கிறீர்களா? தாகத்துக்குக் குளிரக் குளிர தண்ணீர் குடிக்க ஆசைப்பட்டால் ப்ரிட்ஜ் இருக்கிறது. ஷவரும் தொட்டியுமாக குளியலறை இருக்கிறது.

பெரிய லைப்ரரி இருக்கிறது. நீட்ஷேயின் தத்துவம் குழம்பாமல் படிக்க ஆசையா? வாருங்கள் என் குடிசைக்கு. வெட்டப் படாத (அ தா வ து 'அடிக்கவோ, கொல்ல'வோ படாத) அசல் ஹெரால்ட்ராபின்ஸ் வேண்டுமா? இருக்கிறது. சதாசிவபண்டாரத்தாரின் சரித்திரக் குறிப்புக்களிலிருந்து ராஜேந்திர குமாரின் நாவல்கள் வரை எல்லாமே இருக்கிறது.

வக்கிரமான ஆசைகள் ஏதும் எழாமல் அமைதியாக இருக்கும் போது எடுத்துப் படிப்பதுண்டு – எதையாவது.

கார் எடுத்து மதியமானால் மைலாப்பூரில் வீட்டுக்குப் போய் அம்மாவைக் கத்தரிக்காய் துவையல், மிளகு ரசம் செய்யச் சொல்லி சாப்பிட்டு வருவேன்.

கார் இருந்தும் பஸ் ஸ்டாண்டில் நான் நிற்பது பஸ்சுக்காக அல்ல. பெண்களுக்காக! (உடனே தப்பாக நினைக்காதீர்கள். உங்கள் நினைப்பு தப்பு.)

பெண்ணைத் தேர்ந்தெடுக்கும் ஆசையில் நிற்கிறேன்.

காதலிக்கவா? கல்யாணத்துக்காகவா இல்லை.

கொல்ல.

சிரிப்புச் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். அந்தக் குதிரை வால் கொண்டைப் பெண் சட்டென்று என் இதயத்தில் உறைந்து போனாள். நிரவினாள் என்றாலும் பொருந்தும்.

நெஞ்சை ,நிமிர்த்தி கையை வீசி அலட்சியமாகப்பேசிக்கொண்டிருந்தாள்.

மார்புகளில் மிகக் கச்சிதமான அளவுகள் கவனத்தைக் கவர்ந்தன.

பார்வையிலும் உதட்டோரத்திலும் அவளது ஆங்கிலப் புலமையின் அலட்சியம் நிரந்தரமாக குடி இருந்தது.





ஜீன்ஸுக்கும் வயிற்றில் மடித்துக்கட்டிய குட்டையான சட்டைக்கும் இடையே திதர்சனமாகத் தெரிந்த வயிற்றுக்கும், இடுப்புக்களின் வளைவுக்கும் பளபளப்புக்கும்—உட்கார்ந்த நிலையிலேயே நூறு கவிதைபாடி அம்பிகாபதியைத் தோற்கடிக்கலாம். ஆனால் அவள் உடம்பை ரசிப்பதை விட மூச்சுத் திணறத் திணற அவள் சாவதைத்தான் பார்க்க அதிகம் ஆசைப்படுகிறேன்.

''ஏய், சீமா,'' என்று அழைத்த இன்னொரு பெண்ணைப் பார்த்தேன். முதல் பார்வையிலேயே அவளிடம் ஏதோ ரகசியம் இருப்பதாக மனசில் பட்சி சொல்லிற்று.

கறுப்பு ஃபியட் கார்கள் வரும் போதெல்லாம் திரும்பிப் பார்த்து ஏமாந்து கொண்டிருந்தாள்.

நன்ருகப் பார்த்துக் கொள்ளுங்கள்.

இந்த இரண்டு பேரில் ஒருத்தியைத்தான் இந்த அத்தியாய முடிவில் நான் கொலை செய்யப் போகிறேன்.

''ஏய்டி இவளே'' அந்த சீமா கேட்டாள். ''பழைய டேல் ஆஃப் ட்டு சிடீஸ் புஸ்தகம் கிடைக்குமா? எங்க லெண்டிங் லைப்ரரிலே இல்லையாம்.''

''எதுக்குடி அந்த ஹைதர் அலிகாலத்துப் புஸ்தகம்?''

''ஒரு ரெஃபரென்ஸுக்கு வேண்டி இருக்கு.''

''எங்கப்பா ஸ்கூல் படிக்கிறச்ச நான் டெ—டெயில் புஸ்தகமாயிருந்ததாம். போன வாரம் பரணை ஒழிக்கிறப்ப தூசதட்டிப் போட்டதைப் பார்த்ததாக ஞாபகம். இருக்கா பார்க்கறேன்.''

''நாளைக்கு இதே நேரம் இங்கே வரேன். கொண்டு வரயாடி உமா.''

அந்த உமா பெண் என்ன சொல்லிற்ரே எனக்குத் தெரியாது. நான் மட்டும் மனதுக்குள்ளே சொல்லிக் கொண்டேன்: ''கொண்டு வரேன்.''




மறுநாள் —

நிடரென்று நான் புத்தகத்தை நீட்டியதும் கொஞ்சம் அயர்ந்து தான் போனுள் அந்த சீமா. ''உங்களுக்கெப்படித் தெரியும்?''

''நேற்று நீங்க உங்க சினேகிதியை கேட்கிறச்சே தற்செயலாக என் காதிலும் விழுந்தது.''

நன்றி சொல்லி வாங்கிப் பார்த்து வியந்தாள். ''அதென்ன அது. ஹைதர் காலத்து புஸ்தகம் கருக்கழியாம புதுசா இருக்கே?''

''போன வருஷம் என் அப்பா லண்டனுக்குப் போனப்ப டிக்கன்ஸின் எல்லாப் புத்தகங்களையும் புதிய பதிப்பாக வாங்கி வந்தார் —என் லைப்ரரிக்கு.''

''லைப்ரரி வச்சிருக்கீங்களா என்ன? எங்கே? என்னையும் மெம்பராக சேர்த்துக்குங்களேன். ப்ளீஸ். நான் ஒரு புத்தகப் புழு.''

''இது சர்க்குலேஷன் லைப்ரரி இல்லே. என் ஒருத்தனுக்காக நானே சேர்த்து வைச்ச லைப்ரரி. ஏழாயிரம் புஸ்தகமிருக்கு.''

''வாவ்'' கைகளை விரித்தாள். ரகசியமாகக் கேட்டாள். ''பெட்னி இருக்குமா?''

''ராபின்ஸன்தானே? வெட்டப்படாத அசல் புஸ்தகமே இருக்கு.''

''ஒருநாள் உங்க லைப்ரரிக்கு வரப் போறேனே''.

''இப்பவே வரலாமே.''

''இல்லே. நான் காத்திருக்கேன்.''

''சினேகிதிக்கா? புஸ்தகம் தான் கிடைச்சாச்சே.''

''இல்லே இது வேற. என் காதலன் வரும்'' என்றாள் அஃறிணையில்.

''காதலனு?'' என்று நான் திணறும் போதே—

''வந்தாச்சு.'' என்று பூரித்துப்போனாள். உற்சாகமாகக் கையாட்டினாள். ''ஹாய் ராஜா.''

மோட்டார் பைக் வாலிபன் ஒருவன் அரை வட்டம் போட்டு அந்தப் பக்கத்திலிருந்து இந்தப் பக்கமாக வந்து நிறுத்தினான். '' ஹாய் சீமா'' என்றான்.

''பாஸ். என் புதிய சினேகிதனை சந்தி. மிஸ்டர்...'' தடுமாறினாள் ''மிஸ்டர்'' —என் பெயரைச் சொன்னேன்.

அந்த ராஜா கீழ்வரிசைப்பற்கள் பளிச்சிடச் சிரித்தான்.

''மாணிக்கம். பெயரில் இருக்கிறபழமை தோற்றத்தில் இல்லே. நல்ல ஸ்மார்ட்டா இருக்கீங்க.''

''மிஸ்டர் மாணிக்கம்'' சீமா அறிமுகப்படுத்தினாள். ''இதுதான் எனக்கு பாஸ்—கம் —காதலன். பெயர் ராஜா. காக்காத்தான் தெருவிலே 'ராஜா துப்பறியும் பாக்டரி'ன்னு ஒண்ணு வச்சு நடத்தரார். ஊரிலே எங்கே தப்பு நடந்தாலும் உடனே இவருக்கு மூக்கிலே வியர்க்கும்.''

''துப்பறியும் பாக்டரி'' சிரித்தேன். ''பெயர் புதுமையாயிருக்கு''.

''நன்றி கமலஹாசனுக்கு.''

''ஹூ தோ ராஜா.'' அபரிமிதமான ஆர்வத்துடன் சொன்னாள் சீமா. ''சார் வீட்டிலே

ஒரு பெரிய லைப்ரரியே வச்சிருக்காராம் நான் போகப் போகிறேனே.''

''வாசக சாலை வரைதானே?''

''பொறுமை — உனக்குப் பொறுமை.''

''மிஸ்டர் மாணிக்கம் உங்க வீடு எங்கே இருக்கு?''

''மைலாப்பூர்லே.''

''விலாசம்?''

சொன்னேன். ''நானும் உங்க துப்பறியும் பாக்டரிக்கு வரலாமா?''

''அவசியம். அவசியம். நம்பர் நாலு காக்காத்தான் தெரு. தி. நகர்.''

''அவசியம் வரேன். நல்ல கேஸோடு வரேன்.''

''ஆனா பதிலுக்கு உங்க லைப்ரரிக்கு நான் வர மாட்டேன். கூப்பிட்டு வைக்காதீங்க. எனக்கும் புஸ்தகங்களுக்கும் ரொம்ப தூரம்.''

''நீங்க வரல்லேன்னு பரவாயில்லே''. சொன்னேன். ''வரேன்னு சொல்ற இவங்களை மட்டும் தடுக்காதீங்க...''

''தாராளமாகக் கூட்டிட்டுப் போங்க. ஆனா எதுக்கும் நாலடி தள்ளியே நின்னுப் பேசுங்க. கராத்தே மணியோட நேரடி சிஷ்யை.''

சிரித்தேன். ''ஏன் என் உடம்பைக் கூறு போட்டு வித்துடுவாங்களா?''

''பை பை'' என்ற அந்த ராஜா —அந்த சீமா பில்லியனில் ஏறிக் கொண்டதும் மோட்டார் பைக்கை நழுவ விட்டான்.

அவர்கள் போவதைப் பார்த்தேன். பார்த்துக் கொண்டேயிருந்தேன் நெடுநேரமாக.

அந்த சீமாவைக் கொலை செய்யும் யோசனையை அநேகமாக கைவிட்டு விட்டேன். காரணம்? எனக்கே சரியாகப் புரியவில்லை.

அவள் கராத்தே மணியின் சிஷ்யை என்பதனால் பயம் வருகிறதா?

இல்லை. எனக்குத் தெரியும் கராத்தே மணியின் சீடர்கள் தற்காப்புக்கல்லாமல் கையை ஓங்க மாட்டார்கள். மிலிடரி டிஸிப்ளின் உண்டு என்கிறார்களே.

அதனால் என் பயம் அது அல்ல.

அவள் காதலன் துப்பறிவாளன். என்னைப் பார்த்து விட்டான். நாளைக்கு சீமா என்னைப் பார்க்க வந்து காணாமல் போனால் —அவன் சந்தேகம் நேராக என் மீதே பாயும்.

விலாசம் வேறு சொல்லி விட்டேன்.

அதெல்லாம் வம்பு. ஆபத்தைத் தேடிப் போய் மாட்டிக் கொள்கிற சங்கதி. வேறொரு பெண்ணைத் தேடிப்—''

என் பேச்சு சட்டென்று நின்றதற்குக் காரணமிருந்தது.

நேற்று சீமா புத்தகம் கேட்ட பெண் உமா தாமதமாக பஸ் ஸ்டாண்டுக்கு வந்தாள். சீமாவைத் தேடி அவள் விழிக்கும் போது—

அருகில் போய் நின்று — ''ஹலோ மிஸ். உமா'' என்றதும் —

யாரோ உட்காருமிடத்தில் கிள்ளினாற் போலச் சட்டெனத் திரும்பினாள் ''என் பெயர் உங்களுக்கெப்படித் தெரியும்?''



அவள் கையிலிருந்த புஸ்தகத்தை காட்டினேன். 'டேல் ஆப் டு சிடீஸ்?'' புராதனமாகத் தொட்டால் அப்பளமாக நொறுங்கும் நிலையிலிருந்தது அது.

''இந்தப் புஸ்தகத்தோட என் சினேகிதி உமா வருவாள். அவளையும் கூட்டிட்டு வாங்கன்னு இப்பத்தான் மோட்டார் பைக் இலே மிஸ்டர் ராஜாவோட போயிட்டாங்க.''

''என்னையா? எதற்கு?''

''தெரியல்லே. ஏதோ செலிப்ரேஷனும். முக்கியமா இந்தப் புஸ்தகம்.''

நம்பினாள். ''ஆனா அதெப்படி உடனே தி. நகர் போக முடியும்?''

''ஏன்? என் கார் இருக்கே?''

''அட அதில்லே சார். வீட்டிலே யாருமில்லே. பூட்டிட்டுச் சாவியை நானே கொண்டு வந்துட்டேன். யாராவது வந்தாத் தவிப்பாங்களே'' சொன்னாள். ''ஒரு சின்ன உதவி செய்யறீங்களா. இந்த புஸ்தகத்தை அவள்கிட்டத் தந்துட முடியுமா?''

''முடியும். அதோட உங்களையும் உங்க வீட்டிலே கொண்டு போய் விட முடியும். அப்படியே உங்க வீட்டுக் காப்பி ரொம்ப நல்லா இருக்குமாமே கேள்விப்பட்டேன்; அதையும் ருசி பார்க்க ஆசை.''

''அவசியம் வாங்க'' என்றவள் உரிமையுடன் காரின் பின் ஸீட்டில் ஏறிக்கொண்டாள்.

காரில் போகும் போதே அவளை மிக சினேகிதம் பிடித்து விட்டேன்.

''கமல், ரஜினி, உனக்கு யாரைப் பிடிக்கும்?''

''அவங்க எல்லாம் எட்டாத நட்சத்திரங்கள். அவங்களுக்காக ஏன் ஏங்கி ஏமாறணும்? எட்டக் கூடிய மனிதர்களைத்தான்



உபன்யாசம் செய்பவர்: ''தன் மீது தவறு இருக்கும் போது விட்டுக் கொடுப்பவன் தான் புத்திசாலி! தன் மீது தவறு இல்லாத போதும் விட்டுக் கொடுப்பவன்...''

கூட்டத்தில் ஒருவன்: ''கல்யாண மானவன்!''

—ஆர். எஸ். சுப்பிரமணியன்.



விரும்புவேன். உங்களை மாதிரி அழகும் ரசனையும் உள்ளவரை தேர்ந்தெடுத்துக்கப் போறேன்.''

''அசல் இருக்க எதுக்காக போலியைத் தேடணும்?''

''உம் ஆசை!'' சிரித்தாள். ''அந்தக் கருவேல மரம் இருக்கிற வீடு.'' கனவுடன் பார்த்தேன்.

வீட்டில் – ஹாலில் என்னை உட்காரச் சொல்லிவிட்டுச் சமையலறையில் அவள் போன கொஞ்ச நேரத்துக்கெல்லாம் –

காப்பிக் கொட்டை வறுபடும் மணம் வீசியது. சமையலறைக்குள் எட்டிப்பார்த்தேன்.

''உள்ளே வரலாமா?''

மேஜை ஓரத்தில் பொருத்தி நிறுத்தப்பட்ட மெஷினில் காபி கொட்டையை போட்டுப் பிடியைக் கரகரவென்று சுற்றித் தூளாகக் கக்க வைத்துக் கொண்டிருந்தவள் திரும்பிப் பார்த்து சிரித்தாள். ''என்ன? என்னைக் கற்பழிக்கப் போறதாக உத்தேசமா?''

''இல்லே, கொலை செய்வதாக ஆசை.''

''செய்யவாமே'' சிரித்துக் கொண்டே சொன்னவள் காஸ் ஸ்டவ்வை ஏற்றாமலே வெளியேறிப் போனாள்.

வாசலில் ஸ்கூட்டரோ எதுவோ வந்து நிற்கும் ஓசை கேட்டது.

அவசரமாகப் பக்கத்திலிருந்த குளியலறைக்குள் போய் நின்றுக் கொண்டேன். மீண்டும் வெளியே வந்து அவசரமாக ஸ்டவ்வின் ஸிலிண்டரை முழுசாகத் திறந்து விட்டேன். மீண்டும் குளியலறையில் பதுங்கினேன்.

தோல் நிறக் கையுறையை மாட்டிக் கொண்டேன். எதிலும் ரேகை பதியக் கூடாது.

நின்று போன அறைக்கும் மெஷினின் கரகர ஓசை மீண்டும் கேட்கத் துவங்கிய போது –

நான் பாய்ச்சலுக்குத் தயாரானபோது தான் –

மின்சாரத் தடை ஏற்பட்டு அறை இருட்டில் மூழ்கியது.

சட்டென்று பாய்ந்தேன்.

திரும்பி நின்ற அவள் சில்லவுட் உருவத்தை வைத்து மூக்கை ஒரு கையாலும் வாயை இன்னொரு கையாலும் இறுகப் பொத்தினேன்.

மூச்சுக்காக போராடினாள் கையும், காலும் விலுக் விலுக்கென்று அடித்துக் கொள்ளப் போராடினாள். விடாமல் பிடிவாதமாக மூச்சைத் தடை செய்தேன்.

கொஞ்சம் கொஞ்சமாக அவள் துடிப் படங்கிப் போன போது தான் நான் உணர்ந்தேன். மூச்சுக்காக நானே போராடுவதை போலிருந்தது.

காஸ்! சீறிக் கொண்டு வெளிப்பட்டு அறை முழுவதும் வியாபித்து இருந்தது. வெளியிலிருந்து அப்போது தான் வந்த நிழல் ஜன்னல்கள் சாத்தியே இருந்தன. அறைக் கதவும் மூடி இருக்கவே உள்ளேயே புகையாக சுழன்றது அடுப்பு காஸ்.

அவளைத் தரையில் சரிய விட்டு வெளியே ஓடினேன். சமையலறை கதவை மூடினேன்.

நல்ல காற்றை சுவாசித்து மூச்சை சீர்படுத்திக் கொண்டானதும் –

தீப்பெட்டியைத் திறந்து குச்சியைகிழித்து கதவை மெல்லத் திறந்து உள்ளே வீசியதும்–

சமையலறை திக்கென்று பற்றிக்கொண்டு விட்டது.

வெளியே ஓடினேன்.

தெரு முனையில் நிறுத்தி வைத்த காரை அடைந்து ஏறும்போது –

அந்த வீட்டு வாசலில் கும்பல் சேர்ந்து 'தீ... தீ' என்று கூக்குரல் போட்டது. ''101க்கு டயல் பண்ணுங்க'' என்று யாரோ கத்துவது இங்கே கேட்டது.

கார் வேகம் பிடித்துச் சாலையில் திரும்பிய போது –

தொலைவில் மணியோசை கேட்டது. தீயணைக்கும் படை வண்டியின் மணி ஓசை.

## ஒரு இடைச் செருகல்

மூக்குக் கண்ணாடியை உயர்த்திப் பார்த்த அந்த வீட்டுக்காரம்மாளின் கண்களில் சந்தேகம் இருந்தது.



அமெரிக்காவில் மிகச் சிறப்பான கேள்வியை '64,000 டாலர் கேள்வி' என்ற சிறப்பு அடைமொழியிட்டு அழைக்கின்றனர். அது ஏன் தெரியுமா?

அமெரிக்க விளம்பர ரேடியோ ஸ்டேஷன்களில் க்விஸ் நிகழ்ச்சி நடத்தும் போது, சரியான விடைக்கு 1000 டாலர் பரிசளிப்பது



வழக்கம். பிறகு ஒவ்வொரு விடைக்கும் பரிசு இரட்டிப்பாகும். கடைசியாக ஜாக்பாட் பரிசு என 64000 டாலர் பரிசு அளிக்கப் படும். அந்த ஜாக்பாட் கேள்விக்குப் பெயர்தான் ''64000 டாலர் கேள்வி...!''

ஆதாரம்: வீக் எண்ட்.

தகவல்: ராஜேஸ்வரி.

அந்தத் தம்பதிகளின் முகத்தைப் பார்த்தால் கலியாண களை தெரியவில்லை. கல்யாணமான முதலிரவின் களைப்பும் இல்லை.

''கல்யாணமாயிடுச்சா?'' என்று கேட்டார் பச்சையாக.

''ஆயிடுச்சு மாமி. இதோ கல்யாண சர்டிபிகேட்.''

வாங்கிப் பார்த்தார். ''நீதான் மகேஸ்வரியா?''

''ஆமாம்.''

''புதுசாக் கல்யாணமாச்சுன்னு சொல்றீங்க. வீடு பார்க்க வர்றச்ச யாரும் பெரியவங்க வரலியா?''

''எங்கப்பா அம்மா ஜம்முவிலே இருக்காங்க. கல்யாணம் முடிஞ்ச கையோட ப்ளேன் ஏறிட்டாங்க. உங்களுக்கு அவங்களை பார்க்கிற ஆசையிருந்தா சொல்லுங்க. எங்க சொந்த செலவிலேயே உங்களைக் காஷ்மீர் கூட்டிட்டுப் போறோம். என்னை பெத்தவங்களை அறிமுகப்படுத்தி விடறேன். நீங்களும் காஷ்மீரைப் பார்த்த மாதிரி ஆகும். அப்புறம் வர்ற வழியிலே நாக்பூர் போய் இவளை பெத்தவங்களையும் பார்த்துட்டு வந்துரலாம்.''

தைரியமாக அவன் சொல்லிக்கொண்டே போனதற்குக் காரணமிருந்தது.

அவா ''அதெல்லாம் வேண்டாம்'' என்று சொல்வார் என்று அவனுக்குத் தெரியும். ஹால் மேஜை மீதிருந்த ஆஸ்தலின் ஸ்ப்ரேயும், மற்ற மருந்துகளும் அம்மாளுக்கு ஆஸ்துமா என்று கூறின.

தவிர இது மார்கழி மாதக் குளிர் வேறு.

''ஆமா. இங்கே வீடு காலி இருக்கிறதா உங்களுக்கு யாரு சொன்னது?''

''புரோக்கர்பொன்னம்பலம் சொன்னார்.''

''அவன் கிடக்கான் வெறும்பயல். நான் கரிட்டா சொல்றேன் கேட்டுக்குங்க. மாசமாசம் முந்நூறு ரூவா வாடகை வந்துரணும். மூவாயிரம் ரூவா அட்வான்ஸ் — கைமேல தந்துரணும்.'' என்று அம்மாள் சொன்னதும்—

அப்போதே முப்பது நூறு ரூபாய் சலவைத் தாள்களை அவன் நீட்டியதும்—

அந்தம்மாள் முகத்தில் தனி மரியாதையே வந்தது.

''இப்ப வீட்டைப் பார்க்க வரலாமா?'' என்று வாலிபன் சிரித்தான்.

''அட வாப்பா'' என்ற அம்மாள் உள்பக்கமாகத் திரும்பி, ''அடியேய் சரசுவதி ஆடு பார்க்க வந்துக்கிறாங்கசாவியைக் கொண்டாடி'' என்று கத்திய கத்தலுக்கு காதைப் பொத்திக் கொள்ளும் ஆசை வந்தது இருவருக்கும்.

பூட்டைத் திறந்து விட்டாள்.

''எல்லாம் உள்ளேயே இருக்குது. ஓவர் டாங்க் கட்டி விட்டிருக்கேன். இருவத்திநாலு மணி நேரமும் தண்ணி வரும். ரெண்டு ரூம்பு. ஒரு ஹாலு சமையக்கட்டு. பாத்ரும்பு கக்கூஸ் எல்லாமே தனியாகீது. வெளி வர்ற வேலையே இல்லே.''

''மாசம் ஒரு தடவை வாடகை கொடுக்க கூட . . வரவேண்டாமா?''



காவிப் பல் தெரிய சிரித்தாள் அம்மாள். ''அது வராம முடியுமா? இப்ப கீழ வந்து ஒரு வாயி காப்பி குடிச்சிட்டுத்தான் போவோணும்.''

''அதெல்லாம் அப்புறமா ஒரு நாள். நாங்க போயி துடைப்பத்திலேர்ந்து கட்டிலு வரைக்கும் எல்லாமே வாங்கி வரோணும். வரோம்.''

''தம்பி ரசிது!''

''நாளைக்கு வாங்கிக்கறோம். அப்படியே தரல்லேன்னாலும் கவலையில்லே. உங்களைப் பார்த்தா என் அம்மாவைப் பார்த்த மாதிரியே இருக்கு'' என்று அவன் சொன்னதும்—

அம்மாள் முற்றிலும் சரண்டர்.

## 2

ராஜா துப்பறியும் பாக்டரிக்கு நான் போன போது—

பத்திரிகையில் 'இளம் பெண் கருகி சாவு' செய்தியைப் படித்துக் கொண்டிருந்தார்கள். அந்த ராஜாவும் சீமாவும்.

எங்கள் ஊரில் (குடியாத்தம் — வ. ஆ.) மக்கள் நடமாட்டம் அதிகமுள்ள பிரதான வீதியொன்றில் மழைக்காலங்களில் தண்ணீர் குளம் போல் தேங்கியிருக்கும். லாரிகள் அந்த வழியே சென்று மழைத் தண்ணீரோடு மண்ணையும் சேர்த்துக் குழப்பி விட்டுச் செல்லும். இந்தச் சீர்கேட்டை முனிசிபாலிட்டி கவனிப்பதாகவே இல்லை! சில இண்டல் பேர்வழிகள், அட்டைகளில் பெரிய பெரிய எழுத்துக்களில் 'இவ்விடம் நாஜே ஐ.ஆர்.—8 விதைக்கபடும்!', 'இங்கு எல்லாவகையான கொசுக்களும் மலிவு விலையில் கிடைக்கும்!' என்று எழுதி சேற்றின் நடுவே நட்டு விட்டார்கள்! அடுத்த வாரம் பள்ளம் இருந்த இடம் சீர்செய்யப்பட்டுச் சிரித்துக் கொண்டிருந்தது!

தகவல்: ஆர். அரிகோபி.





என்னைக் கண்டதும் ''வாங்க'' என்ற அந்த சீமாவின் முகத்தில் மகிழ்ச்சி இருந்தது எனக்கு வியப்பைத் தந்தது.

''கார் நம்பரை நோட் பண்ணி சொல்லி இருக்காங்க இல்லே. சாயங்காலம் ஆறு மணிக்குள்ளே போலீஸ்காரங்க 'துருவித் துருவி' விசாரிச்சிடுவாங்க'' என்று அந்த ராஜா சொன்னதும் எனக்கு கபீர் என்றது.

பேப்பரைப் பிடுங்கிப் பார்த்தேன். என் நினைப்பு சரி. என் கார் நம்பரேதான்.

''என்ன மிஸ்டர் மாணிக்கம்? 'பே'ன்னு முழிக்கறீங்க?'' என்று ராஜா கேட்டதும் தான் முழியை சரிப்படுத்திக் கொண்டேன்.

''என்ன மிஸ்டர் மாணிக்கம் வர்றச்ச கேஸோட வரேன்னீங்க, கையை வீசிட்டு வந்திருக்கீங்க?''

''கொண்டு வந்திருக்கேன். தயக்கமா இருக்கு.''

''தயங்கறதுக்கு என்ன இருக்கு? உங்களுக்காக நான் யார்மேல் கண் வைக்கணும். ஐ மீன் பிரைவேட் 'ஐ'!''

''என் மேலேயே'' என்றதும் இருவரும் திடுக்கென்று விழித்தார்கள்.

''புரியலே. விவரமாச் சொல்லுங்க.''

சொன்னேன். ''விளையாட்டுத் தனமாச் செய்துட்டேன்.''

எல்லாவற்றையும் பொறுமையாகக்கேட்டு விட்டு ராஜா சொன்னான். ''இது போலீஸில் சொல்ல வேண்டிய ஒப்புதல் வாக்குமூலம். இதிலே நான் செய்ய என்னயிருக்கு?''

''என்னைக் காப்பாற்றணும். ஏதாவது எப்படியாவது — என்ன செலவு ஆனாலும் பரவாயில்லே.''

என் பேச்சு அந்த ராஜாவின் ஒரு காது வழியாகப் போய் இன்னொரு காது வழியாக வெளியேறுவது துல்லியமாகப் புரிந்தது.

''ஏய் சீமா. உன் சிநேகிதி உமா செத்து போயிட்டாளாமே. நீ அழப்போகல்லே?''

''நீயும் வா. உன்னைதான் கட்டிக்கிட்டு அழப் போறேன்.''

''பொது இடத்திலேயா? நான் மாட்டேன். எனக்குக் கூச்சமாயிருக்கும்!''

அவர்களின் விளையாட்டுப் பேச்சு எனக்கு எரிச்சலைத் தந்தது... ''கொஞ்சம் சீரியஸா பேசறீங்களா மிஸ்டர்?'' என்றேன் கோபமாக.

''இப்ப என்ன நடந்துப் போச்சுது? ஏன் இப்படிக் கத்தறீங்க?''

''அதானே'' சீமா சொன்னாள். ''உங்களை என்ன போலீஸ்காரங்க கைதா பண்ணிட்டாங்க? எதுக்காக அவளை கொலை செய்தீங்க? அவள் உங்களை என்ன பண்ணினாள்?''

''அதான் சொன்னேனே. விளையாட்டுத் தனமாகச் செய்துட்டேன். இப்ப பயமா இருக்கு.''

''ஏய் மிஸ்டர். விளையாட்டுத்தனமா இது! கொலே! எவ்வளோப் பெரிய விஷயம். என்னமோ காத்தாடி விட்டேன்கிறமாதிரி சொல்றீங்க. சரி, கண்ணால் பார்த்த சாட்சி இருக்கா?''

''புரியலே.''

''நீங்களும் அவளும் கார்லேருந்து இறங்கி வீடு வரை போனதை யாராவது பார்த்தாங்களா? அதாவது யாராவது குறிப்பா உங்களோட பேசினாங்களா?''

''இல்லே.''

''பின்னே ஏன் பயப்படறீங்க?''

''கார் நின்னதைப் பார்த்திருக்காங்க. நம்பரைக் குறிச்சுக் கொடுத்திருக்காங்களே.''

''கார் நின்னதை மட்டும் வைச்சு உங்களை எப்படிக் கொலைகாரன்னு சொல்லிட முடியும்? சிகரெட் வாங்க நிறுத்தினேன்னு சொல்லுங்க.''

''நான் சிகரெட் பிடிக்க மாட்டேனே''.

''அப்ப மூக்குப் பொடி வாங்கப் போனதாகச் சொல்லேன்.'' ஏதோ சொல்ல முயன்ற என்னைக் கையமர்த்தினாள். ''அதுவும் பழக்கமில்லேன்னு சொல்லிடாதே. பாஸ் இவர் கேஸை எடுத்துக்குங்க, ரொம்ப பயப்படறார்.''

''என்ன நீ? போலீஸுக்கு உதவியாகக் குற்றவாளியைக் கண்டுபிடிச்சுத் தரதுதான் துப்பறியறவங்க வேலே. குற்றவாளியைத் தப்ப வைக்க யோசனை சொல்வது இல்லே. சட்டப்படி தப்பு. அப்புறம் நான்தான் சினிமா ஹீரோ மாதிரி கம்பி கதவை பிடிச்சிட்டு, ''சீமா, எனக்காகக் காத்திருக்காதே. நல்ல பையனு கட்டிக்கன்னு அழுதுகிட்டே வசனம் பேசணும். வேண்டாம்மா. தாயே. என்னை விட்டுடு.''

''அது அவ்வளவு கஷ்டமில்லே. இவர் வழக்கை நீங்க எடுத்துக்கறீங்க.'' கிளம்பினாள். ''புறப்படுங்க. அங்கே போய் நிலவரம் எப்படி இருக்குன்னு பார்த்து வரலாம்.''

''நீங்களும் வாங்க மிஸ்டர் மாணிக்கம்'' என்று ராஜா சொல்லவும் —

தயங்கினேன்.

''பரவாயில்லே. வாங்க. நாங்க பார்த்துப் போம்.''

நாங்கள் புறப்படும் போது வாசலில் போலீஸ் வந்தது. என் காரை மோப்பம் பிடித்து என்றுதான் நினைத்தேன். ஆனால் இல்லை. சீமாவைத் தேடித்தான் வந்திருந்தார்கள்.

''என் சிநேகிதி உமா செத்துப் போயிட்டாளாம். பார்க்கப் போறேன்'' என்றாள்.

''அந்த உமா விஷயமாத்தான் பேச வந்திருக்கோம்.''

''அப்ப கொஞ்சம் காத்திருங்க. சவத்தை எரிக்கிறதுக்கு முன்னாலேயே போய்ப் பார்த்துட்டு வரேன்.''

''பார்க்க முடியாது. உடம்பு கொடுக்கிற மாதிரி இல்லேன்னு ஆஸ்பத்திரியிலே சொல்லிட்டாங்க. நீங்க அவங்களைப் பெத்தவங்களைத்தான் போய்ப் பார்த்து அனுதாபம் சொல்லிட்டு வரவேண்டி இருக்கும். அது கொஞ்சம் அப்புறம் கூடப் பார்த்துக்கலாம்.''

திரும்பி உள்ளே வந்தோம்.

''ஸார் யார்?'' என்ற இன்ஸ்பெக்டருக்கு தெரியாமல் — கண்ணுலேயே சீமாவிடம் கெஞ்சினேன். ''சொல்லாதே.''

''வாடிக்கையாளர். கேஸ் விஷயமாக வந்திருக்கார்.''

''சரி. விஷயத்துக்கு வருவோமா? நேத்து சாயங்காலம் அவங்க மகள் உமா உங்களைச் சந்திக்கப் போகிறதாகச் சொல்லி ஏதோ நான் — டிடெய்ல் புத்தகத்தை எடுத்துப் போனதாக அவங்கப்பா சொல்றார்.'' இன்ஸ்பெக்டர் கேட்டார். ''நீங்க சந்திச்சீங்களா?''

''ஸாரி. அவள் வர்றதுக்கு முன்னுலேயே நான் புறப்பட்டு வந்துட்டேன். அப்புறம் அவள் வந்தப்ப இவர்தான் அவளோட பேசி இருக்கார்.''

அதிர்ந்தேன். (''உளறுகிறுளே'').

''பார்த்தீங்களா ஸார்?''

''எஸ்.''

''அவங்க பேச்சு மனுேபாவம் எப்படி இருந்தது? தற்கொலை செய்துக்கப் போகிற மாதிரி ஏதாவது அறிகுறியை உணர்த்தீங்களா?''

''அப்படி எதுவும் தோணலியே சார். காரிலே போறச்சே கூடக் கலகலப்பாதானே பேசினுள்.'' சீமாவைப் பார்த்ததும் பேச்சை நிறுத்தினேன். இப்போது அவள் — பார்வையாலேயே 'உளர்றியே' என்றுள்.

''காரிலே போனீங்களா? எங்கே?''

''அ... அவங்க வீட்டுக்குக் காபி சாப்பிட.''

''சாப்பிட்டீங்களா?''

''இல்லே. சாப்பிடல்லே அத்துக்குள்ளே வந்துட்டேன்.''

''ஏன்?''

''என்ன சார் நீங்க? நெருப்பு எரியற வீட்டிலே யாராவது காப்பிக்காக காத்திருப்பாங்களா? அதான் ஓடி வந்துட்டேன்.''

''என்ன சார்! தமாஷா இருக்கு. காபி சாப்பிடக் கூப்பிட்டப் பெண் உள்ளே காப்பி போடப் போயிருக்கறப்ப நெருப்புப் பத்திகிடுச்சு. அவங்களைக் காப்பாத்த முயற்சி செய்யறது உங்க கடமை இல்லையா?''

''கடமைதான் — ஆனுலும் ரூம் முழுக்கத் தீப்பிடிச்சு எரியறச்சே உள்ளே போய்க் காப்பாத்தறதுக்கு நான் என்ன சூப்பர்மேனு?''

''சரி. விபத்து நடந்து ஒரு நாளாகப் போகிறது. பக்கத்திலிருந்து பார்த்த 'ஐவிட்னஸ்' நீங்க. ஏன் போலீஸுக்குச் சொல்லலே?''

''தோணலே. அப்புறம் நான்தான் கொளுத்தினேன்னு சொல்வீங்களோன்னு பயமாப் போச்சு. அதான்.'' சொன்னேன். ''நான் எப்பவுமே எச்சரிக்கையானவன் சார். காரில போகிறச்சே கூட நின்று—பின்-தொடருவேன்.''

''இப்ப மட்டும் நாங்க குற்றம் சாட்ட மாட்டோம்னு எப்படி நம்பறீங்க.?''

''நோ இன்ஸ்பெக்டர். என் வாடிக்கையாளரைக் காரணமில்லாமல் நீங்க மிரட்டறதை நான் அனுமதிக்க முடியாது'' என்றுன் ராஜா காரமாக.



''அதை நீங்க கேட்கக் கூடாது. கேட்கவும் முடியாது. போலீஸ் கடமையில் குறுக்கே வருகிறது ரொம்பவும் தப்பான விஷயம்.''

''அந்த நடைமுறை சாமானியருக்குமட்டும் தான். ஐயாம் எ லாயர். என் பெயரை நெருடாம சொல்லுங்க பார்ப்போம். ராகவேந்திர ருக்மாங்கத சபாபதி அரவிந்த ராஜா எம். ஏ. பி. எல். துப்பறியும் தொழிலுக்காகக் கழற்றி வைத்த கறுப்புக் கோட்டை — நீங்க இவரைத் துன்புறுத்தினுல் எடுத்து மறுபடியும் மாட்டிக்கத் தயார். இப்ப சொல்லுங்க. என்ன குற்றச்சாட்டை சொல்லிக் குற்றம் சாட்டப் போறீங்க?''

''உமா என்கிற பெண்ணை உயிரோட கொளுத்திக் கொன்ற குற்றத்துக்காக.''

''பீச்சிலேயே நம்ம காதல் முடிஞ்சுடும் போலிருக்கே! நம்ம மேரேஜை எப்ப வைச்சுக்கலாங்க?''

''நேத்தைக்கு லலிதா இப்படித் தான் நம்ம காதல் தியேட்டர்லேயே முடிஞ்சுருமோ என்னவோன்னு கேட்கரு. நீங்க ஏன் கல்யாணம் செய்துக்கறதுக்கு இவ்வளவு அவசரப்படறீங்க?''

—பூ. பெருமாள்சாமி



''யார் சொன்னது?''

''இவரே சொன்னுரே!'' இன்ஸ்பெக்டர் சொன்னுர். ''ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மை.''

''வாய்ப் பேச்சாகத்தானே சொன்னுர். அதை மாத்திக்க எவ்வளவு நேரமாகும்? என்ன எழுதியா கொடுத்துட்டார். தவிர பயத்திலே உளறிய உளறலெல்லாம் பேச்சாயிடுமா?'' ராஜா கேட்டான். 'தவிர இன்ஸ்பெக்டர். என் கேள்வி உங்களுக்குப் புரியலேன்னுதான் நினைக்கிறேன். 'உமா என்கிற பெண்ணை உ யி ரோ ட கொளுத்தி'—ன்னு சொன்னீங்களே அதைத்தான் யார் சொன்னதுன்னேன்.''

''அவளைப் பெத்தவங்களே சொன்னுங்க.''

''அவங்க மட்டும் எப்படி அடையாளம் சொன்னுங்க? பிணம் கொடுக்கக் கூடிய நிலையிலே இல்லேன்னு டாக்டர்கள் சொன்னதா



இப்படித்தானே சொன்னீங்க? உருத்தெரியாத அளவு குலைந்த கருகிப் போன அந்த பாடியை எப்படி உமான்னு தீர்மானம் செய்தீங்க?''

''பெத்தவங்களுக்கு அடையாளம் தெரியாமப் போயிடுமா என்ன?'' இன்ஸ்பெக்டருக்குக் கோபமே வந்தது. ''கோர்ட்டிலே கேட்க வேண்டியதை எல்லாம் இங்கே கேட்காதீங்க.''

''ஸ்டேஷனிலே கேட்க வேண்டியதை எல்லாம் நீங்க இங்கே கேட்டால் நான் கோர்ட்டாக நினைச்சு கேட்கிறதிலே தப்பில்லேன்னு நினைக்கிறேன்.''

''அப்ப ஸ்டேஷனுக்குக் கொண்டு போய் விசாரிக்கிறேன். நீங்களும் உங்க வாக்குவாதத்தை கோர்ட்டிலே வைச்சுக்குங்க.''

''சொன்னீங்களே! இது பேச்சு. ஆளை நேரடியாக் கூட்டிட்டு போக இவர் பேரிலே அரெஸ்ட் வாரண்ட் இருக்கா? நான் பார்க்கணுமே.''

''வாங்கணும்.''

''வாங்கிட்டு வாங்க. இங்கே இல்லே. நேரே அந்த உமா வீட்டுக்கு வாங்க. இவரையும் கூட்டிட்டுப் போகிறோம். அங்கே நீங்க குற்றவாளியைக் கைது செய்யலாம்.''

வெளிறிய நீலப் புகையுடன் ஜீப் கிளம்ப—நாங்களும் எங்கள் கார் ஏறிப் புறப்பட்டோம்.

## 3

**பா**தி எரிந்து போன சோகையான வீட்டினுள்ளே போன போது அந்த உமாவின் அம்மா காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்தவர் எங்களைக் கண்டதும் முதலில் 'ஙே' என்று விழித்தார். பிறகு—

காபி கோப்பையை வைத்துவிட்டு, ''அம்மாடி சீமா, என் மக போயிட்டாளே. என் செல்லக்கிளி போயிட்டாளேடி'' என்று கதறி அழத் துவங்கினாள்.

மெல்ல சீமாவிடம் கேட்டேன். ''இவங்க தான் அவங்க அம்மாவா?''

''ஏன் சந்தேகப்படறீங்க?''

''இல்லே குரல்லே கொஞ்சம் போலித் தன்மை தெரியல்லே? மகளின் பிணத்தைக் கூடப் பார்க்க முடியாமப் போன எந்த அம்மாவும் நிம்மதியாக் காப்பி சாப்பிடமாட்டாள்.''

''இதுவும் ஒரு பாயிண்ட்தான்'' என்று கிசுகிசுப்பாகச் சொன்னவள் தேர்ந்த சினிமா நடிகையின் லாகவத்துடன் ''மா...மிசசு'' என்று கட்டிப் பிடித்து அழுதாள். ''என்ன ஆச்சு மாமி? தற்கொலை செய்துக்கிற அளவுக்கு அவளுக்கு என்ன மாமி குறை? முந்தா நாள் கூட என்னோட சிரித்துப் பேசினாளே.''

''பைத்தியம் மாதிரி உளறாதே. என் மக ஏன் தற்கொலை செய்துக்கப் போறா? இது விபத்துடி. நேத்து காலையிலே காஸ் அடுப்பை சரியா மூடிக்காம விட்டிருக்கேன் போல இருக்கு. தூக்கணும்பட்டியிலே சாவுக்குப் போயிட்டோம். விபரம் புரியாம என் மக காலேஜ்லேருந்து வந்து அடுப்பைப் பத்த வைக்கக் குச்சியை கிழிச்சிருக்கா. ரூம் முழுக்க காஸ் திடீர்னு பத்திக்கிடுச்சு. இன்னொரு தடவை தற்கொலைன்னு சொன்னே எனக்குக் கெட்ட கோபம் வரும்.''

அந்த அம்மாளின் கோபம் காரணமில்லாமலிருந்தது. இன்னும் கொஞ்சம்போனால் 'போடி வெளியே' என்று துரத்தியிருப்பாள் போலிருக்கிறது.

வெள்ளை வெளேர் சலவைப் டவுடர் மாடல்கள் போல சிலர் எரிந்து போன பகுதிகளை ஆராய்ந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களுடன் சோடா பாட்டில் கண்ணாடியும் கணிசமான முன் வழுக்கையும் விழுந்த வயதான ஒருவர் சளசளவென்று பேசிக் கொண்டே இருந்தார்.

அவரையும் அவர் பேசும் அழகையும் ரசித்தவாறு இருந்த சீமா சட்டென்று என் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு நடந்தாள்.

''ஏய் எங்கே போறீங்க?'' 'என்ற ராஜாவை முறைத்தாள்.

''போகும்போதே அபசகுனமாப் பேசாதே. அரை மணியிலே இவர் லைப்ரரிக்குப் போய்ப் புஸ்தகங்களை பார்த்துட்டு வந்துடறேன்.''

''அதுக்கென்ன இப்ப அவசரம்?'' என்று நான் பரிதாபமாகக் கேட்க —

''போலீஸ் பிடிச்சிக்கிட்டுப் போயிட்டா திரும்பி வருவியோ தூக்குலே போட்டு அப்படியே போயிடுவியோ. அப்புறம் யார் அந்த லைப்ரரிக்குக் கூட்டிட்டுப் போவாங்க. வா சொல்றேன்.''

''எனக்குக் காபி சாப்பிடணும். நானும் வரேன்.''

தமிழ்நாடு அரசு தற்போது விவசாயிகளுக்குத் தரிசு நிலங்களில் மரங்களை வளர்ப்பதற்காக இலவசமாக மரக்கன்றுகளை விநியோகம் செய்கின்றது. அவை: மா, சப்போட்டா, புளி, பலா, நாதுனை, முந்திரி, கொய்யா, பப்பாளி, ஆரஞ்சு, மாதுளை, யூகலிப்டஸ், சவுக்கு, கருவேலை.

—ஸ்ரீ. எஸ். நாகராஜன்.





''நோ ராஜா. இன்ஸ்பெக்டர் வரச்சே மூணு பேருமில்லாம இருக்கக் கூடாது. நீ இரு. நாங்க போய்ட்டு வரோம். காபி தானே! மாமி, மகேஸ்வரியைக் கூப்பிட்டு இவருக்குக் காபி போட்டுத் தரச்சொல் லுங்க.''

''மகேஸ்வரியா? அவ எங்கே இங்கே இருக்கா? கை சுத்தமில்லே. நிறைய திருடுவா. ரயிலேத்தி போன வாரமே அவ ஊருக்கு அனுப்பிட்டேன்.''

''சரி, சரி, வா'' என்று என்னை இழுத்துப் போய் காரினுள் தள்ளினான். ''புரசை வாக்கம் போ.''

''என் தோட்டம் பீமாவரத்திலே இருக்கு. லேப்ரரியும் அங்கேதான்''—

''அது நரகத்துக்குப் போகட்டும். நீ அவசரமா புரசைவாக்கம் போ. அங்கே நெம்பர் பத்து சாராயக்கடை எதிரே நிறுத்து'' என்றான் பூரிப்பாக.

''ச்சீ... நான் சாராயமெல்லாம் குடிக்க மாட்டேன்'' என்றேன்.

''நான் மட்டும் குடிக்கிறேனா என்ன? சும்மா துணைக்கு வா. ஒரு ஆளை அங்கே கண்டுபிடிக்கணும். புரோக்கர் பொன்னம்பலத்தைப் பிடிக்கணும்.''

சாக்னா கடை வாசலில் காரமான கோழி துண்டுடன் புட்டி நிறைய சாராயமுமாக அவனைக் கண்டுபிடித்தோம். புரோக்கர் பொன்னம்பலம்!

சீமா போட்ட அதட்டலில் அவன் போதை சரேலென்று இறங்கி விட்டது.

''நான் அனுப்பின மகேஸ்வரியையும் அவ புருஷனையும் எங்கே வீடு பிடிச்சுக் கொடுத்தே சொல்லு.''

சொல்லிவிட்டான்.

நாங்கள் போய்க் கதவைத் தட்ட — இறந்த பெண்ணைக் கண்டதும் அதிர்ந்து போனோம் — இல்லை — போனேன்.

''ஏய்டி உமா. குத்துக்கல்லட்டாமா இருந்துட்டு ஏண்டி செத்துப் போனதாக ஊர் பூராப் புரளி கௌப்பி விட்டிருக்கே?''

பதில் சொல்லத் திணறி முகம் வெளுத்துப் போனாள் அந்த உமா.

''அது வந்து — அது வந்து—''

''நீ ஒண்ணும் சொல்ல வேண்டாம். உன் ஆயிரம் ரூபா சம்பளத்துக்கு ஏற்ப உன்னை ஐம்பதாயிரம் ரூபாய்க்கு மூணு வருஷம் முந்தியே பாலிஸி எடுத்தாங்கன்னு சொன்னே. இன்னைக்கு உங்க வீட்டிலே அந்த இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்ட்டைப் பார்த்ததுமே எனக்குப் புரிஞ்சுப் போச்சு. கூடவே உடனடியா வாடகைக்கு வீடு கேட்டு இந்தத் தரகனை நான் அறிமுகம் செய்ததும் நினைவுக்கு வந்தது. கூட்டிப் பார்த்தேன் விடை சரியாவே வந்தது.

''ஊர்லேருந்து கூட்டிட்டு வந்த அநாதைப் பெண் மகேஸ்வரியை சாக விட்டுட்டு நீ அவளாகி அவளை நீயாக்கி இன்ஷ்யூரன்ஸ் பணத்துக்காக உங்கம்மாப்பா போட்ட திட்டமா இது?''

''நிஜம்தாண்டி. வீட்டை வேற இன்ஷ்யூர் செய்து இருக்காங்க. ஒரே கல்லிலே ரெண்டு மாங்கா அடிக்க ஆசைப்பட்ட அம்மா செய்த பிளான் இது. வேலைக்காரிக்குத் தெரியாம காலையிலேயே காஸ் அடுப்பைத் திறந்து விட்டிருந்தேன். நாட்டுப்புறப் பொண்ணு விஷயம் தெரியாம தீக்குச்சியைக் கிழிக்கப் போக திடீர் நெருப்புப் பத்திக்கிட்டு கத்தக் கூட நேரமில்லாமல் கருகிப் போயிட்டா. நான் சத்தடியில்லாம காதலனோட இங்கே ஓடிவந்துட்டேன். மூணுநாள் முன்னாலேயே மகேஸ்வரி என்கிற பெயர்லே இவரை கல்யாணம் கூட செய்துக்கிட்டேன். நீதான் கெடுக்கப் பார்க்கிறே.''

''துப்பறியும் பாக்டரி ஆனாச்சே. தப்பு எங்கே நடந்தாலும் எனக்கு மூக்கிலே வியர்க்கும். அதுசரி, இவரென்னமோ வேற தினுசா கதை சொன்னாரே.''

சிரித்தேன். ''அதோ கருவேல மரம் இருக்கே அந்த வீடுன்னு இவன் சொன்னது வரைக்கும் தான் நடந்தது. அப்புறம் சொன்னதெல்லாம் பொய் கற்பனை.''

[''பொய்யா?'' என்று வியக்கும் சீமாவைப் போலவே திணறும் ஆசாமியா நீங்கள். சந்தேகமானால் பதினோராவது பாராவை மீண்டும் படிக்கவும்.]

மீண்டும் எரிந்த வீட்டுக்குப் போனபோது இன்ஸ்பெக்டர் இருந்தார்.

''ஹேய் ராஜா. இன்னுமா குற்றவாளியை நீ ஒப்படைக்கல்லே?'' என்று நான் கட்டிக் காட்டியதும் கோபமாக எழுந்த அம்மாள் — எனக்குப் பின்னால் உமாவைப் பார்த்ததும் அடங்கி ஒடுங்கிப் போய் நடுங்க ஆரம்பித்தாள்.

---

கமலா: வட்டிக்கடைக்காரனை கல்யாணம் செஞ்சுக்கிட்டது ரொம்பத் தப்பாப் போச்சுடி இப்ப.

விமலா: ஏண்டி? என்ன ஆச்சு?

கமலா: பின்ன என்னடி? உங்கப்பா வரதட்சிணை பணத்தைத்தான் ஒழுங்கா கொடுக்கலே. அதுக்குண்டான வட்டியையாவது மாசாமாசம் ஒழுங்கா தரலாமில்லையான்னு கேக்கறார்டி என்னை.

—கே. எஸ். கலைமணி.



# இலவசம்!



5 மீட்டர் நைலான் துணிக் கயிறு*
இரண்டு பாருடன்

*ரூ. 2/- மதிப்புள்ள

முந்துங்கள் !
இச் சலுகை
கையிருப்பு உள்ள
வரை மட்டுமே

## டோட்டல்
நீலநிற டிட்டர்ஜெண்ட் சலவை பார்

சலுகையில்லாமலும்
கிடைக்கும்




எளிதான
சலவைக்கேற்ற
ஐந்து பகுதிகளை
கொண்டது




தயாரிப்பவர்கள் : கர்நாடக சோப்ஸ் அண்ட் டிட்டர்ஜெண்ட்ஸ் லிமிடெட் பெங்களூர்
விற்பனையாளர்கள் : மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட் பெங்களூர்

MCA/TDB/53M/TAM

# வானொலி எப்படி வந்தது?

மீ.ப.சோமு

"கிட்டப்பாவின் பாட்டுக்களைப் பற்றி மிக உயர்வாக எழுதியிருக்கிறீர்கள். இதுபோல நடிப்புக் கலையில் நீங்கள் ரசிக்கும் வண்ணம் குணசித்திர நடிப்பு அந்தக் காலத்தில் இருந்ததா?" என்று திருவல்லிக்கேணி நண்பர் ஒருவர் தொலைபேசியிலே கேட்டார்.

உண்மை: எஸ். வி. சுப்பையா பாகவதர், வி. எஸ். செல்லப்பா, சின்ன



பல்லவன் பக்கலைக்கு...

மகாதேவய்யர் போன்று நாடக மேடைகளிலே தமது பாட்டினால் புகழ் பெற்று விளங்கிய கலைஞர்களே அந்தக் காலத்தில் அதிகம்! என்றாலும் பி. எஸ். வேலு நாயர், பெண் வேடம் அனந்த நாராயணய்யர் போன்ற சில சிறந்த நடிகர்களும் இருந்தார்கள். இவர்களிடையே மெய்யான நடிப்பு மேதை ஒருவர் இருந்தார். இன்று நினைத்தாலும் அவருடைய நடிப்பின் ஆற்றலை எண்ணி அவருக்கு இரண்டு கைகளாலும் அஞ்சலி சொல்லுகிறேன். அந்த அளவுக்கு என்னைத் தமது நடிப்பினால் மெய்சிலிர்க்கச் செய்தவர் கே. பி. கேசவன்! எனது சிறு வயதில் திருநெல்வேலி நயினார் குளத்துக்கு அருகிலே இருந்த நாடகமேடையில் அவருடைய நாடகங்கள் பலவற்றைப் பார்த்திருக்கிறேன். ஒரே நாடகத்தைப் பல நாட்கள் மீண்டும் மீண்டும் பார்ப்பேன். எல்லாம் அவருடைய நடிப்புக்காகவே! காளிரத்தினம் அவரோடு தோன்றி அற்புதமாக நடித்துச் சிரிசிரி என்று சிரிக்க வைப்பார்! அவரும் ஒரு சிறந்த நடிகரே. திரைப்படங்களை விட நாடகங்களில் நன்கு சோபித்தார் ரத்தினம்!

'பதி பக்தி', 'பம்பாய் மெயில்' போன்ற நாடகங்களில் முக்கிய பாத்திரங்களிலே தோன்றுவார் கேசவன். ஆகா! எப்பேர்ப்பட்ட நடிப்பு! குணசித்திர நடிப்பு என்றால் அதில் அவர் ஒரு மேதை! மிகை இராது. குறைவும் இராது. பிற்காலத்தில் லண்டன் நகரத்தில் உலகப் புகழ் பெற்ற சில ஆங்கில நடிகர்களின்மேடை நாடகங்களைப் பார்த்து நான் அதிசயித்திருக்கிறேன். எனினும் உலகப் புகழ் பெற்ற அந்த நடிகர்களிலே யாருக்கும் எவ்விதத்திலும் எள்ளளவும் தரத்திலே குறையாத நடிப்பு கேசவனின் நடிப்பு! தமிழ் நாடக மேடையின் வரலாற்றில் வைரம்பதித்த தங்க எழுத்துக்களிலே நின்று நிலைக்க வேண்டிய ஒரு பெயர் கே. பி. கேசவன்! சொற்களை அளந்துதான் சொல்கிறேன். புகழ்ச்சியே இல்லை.

நகைச்சுவை நடிப்பிலே காளிரத்தினம் போலவே வி. எஸ். சாமண்ணா இருந்தார். டம்பாச்சாரி நாடகத்தில் சக்கைப் போடுபோடுவார். இவரும் திரைப்படத்தில் அவ்வளவாகச் சோபிக்கவில்லை. கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்களைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். அவர் ஒரு பிறவி மேதை என்பது என் மதிப்பீடு! புதிது புதிதாகக் கற்பனை செய்து அநாயாசமாக நடிப்பார்! அவருடைய சரக்கு அத்தனையும் சொந்தச் சரக்கு! எந்த வசனம் பேசினாலும் அதில் ஒரு கவர்ச்சி இருக்கும்! பாட்டுதான் எப்படிப் பாடுவார் என்கிறீர்கள்! ஒரே இசைத்தட்டில் கோவலன் கதாகாலட்சேபம் கொடுத்திருக்கிறாரே. அந்த ஒரு, ஒரே ஒரு, இசைத்தட்டுக்காகவே அவருக்கு 'நோபல்' பரிசு கொடுக்கலாம்! பிற்காலத்தில் அரசியல் அதிகமாகப் போனதால் அவருடைய கலையை விட மக்கள் அவருடைய பிரசாரத்தை ரசிக்க ஆரம்பித்து விட்டார்கள். நான் குறிப்பிடுவது முழுக்க முழுக்க அவருடைய நடிப்பு என்ற கலையை! பிரசாரம் என்ற பக்கபலமே அவருக்கு இல்லாவிட்டாலும், அவருடைய நடிப்பின் பலம் ஒன்றே அவரை மேதை என்று காட்டிவிடும்!

கே. பி. கேசவனும், என். எஸ். கிருஷ்ணனும் இங்கிலாந்தில் பிறந்திருந்தால்



'ஸர்' பட்டம் கொடுத்திருப்பார்கள்!

• • •

'பண்பாடு' என்ற சொல்லும் 'வானொலி' என்ற சொல்லும், இன்றைக்குத் தமிழ் வழக்கிலே மிகவும் நன்றாகப் பழகி விட்டன. 1938–க்கு முன்பு இந்த இரண்டு சொற்களுமே வழக்கத்தில் இல்லை என்றால் நம்மால் நம்பமுடிகிறதா? ஆனாலும் உண்மை;

ராஜாஜியும் கல்கியும் வேறு சில நண்பர்களும் 'Culture' என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு நேரான தமிழ்ச் சொல், அழகாகவும் இனிமையாகவும் இருக்கக் கூடிய ஒரு சொல், வேண்டும் என்று விரும்பினார்கள். 'கலாச்சாரம்' என்ற சொல் இருந்த போதிலும், வேறு ஒரு சொல் வேண்டும்என்று டி. கே. சி. யைக் கேட்டார்கள். சிந்தனை செய்து டி. கே. சி. அன்றைக்கு வழங்கிய சொல்தான் பண்பாடு!

'வானொலி' என்ற சொல் பழக்கத்தில் தோன்றியது ஒரு சுவையான வரலாறு!

மைசூர் ராஜ்ய ரேடியோ 'ஆகாஷ்வாணி' என்ற சொல்லையே பயன்படுத்தி வந்த காலம் அது! சென்னையில் மைய அரசின் ரேடியோ புதிதாகத்தொடங்கியது! அப்போது சென்னை நிலையத்திலிருந்து தமிழிலே நிகழ்ச்சிப் பத்திரிகை ஒன்று வெளியிட வேண்டும் என முடிவு செய்து, அதன் ஆசிரியராகத் தெ. சி. தீத்தாரப்பன் (தீபன்) நியமிக்கப்பட்டார். பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பைஏற்றுக் கொண்டு, தீபன் முதல் இதழுக்கான வேலைகளை மும்முரமாகச் செய்து கொண்டிருந்தார். பத்திரிகைக்கு என்னபெயர் சூட்டலாம் என்று, அப்போது சென்னை நிலையத்தின் தலைவராக இருந்த விக்டர் பரஞ்சோதியும் மற்ற அதிகாரிகளும் தீபனோடு பலமாக ஆலோசனை நடத்தினார்கள்.

தமிழ்நாடு தனியாகப் பிரியாத நாள் அது. சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரி என்று அழைக்கப்பட்ட முதல் அமைச்சர் பதவியிலே, ராஜாஜி இருந்தார்.

தீபனுக்கு ராஜாஜியைச் சந்தித்து அவரிடம் யோசனை கேட்க வேண்டும் என்று ஆசை. ஆனால் அந்தச் சமயத்தில் ராஜாஜிக்கு ஏகப்பட்ட வேலை. வீட்டுக்கு வந்து சாப்பிடுவதற்குக் கூட, நேரம் கிடையாது. எனவே அவரைச் சந்திக்க முடியவில்லை! தீபன் என்ன செய்தார்?

ஒரு சிறு கடிதத்திலே தமது கோரிக்கையைஎழுதி, இந்தப் பத்திரிகைக்கு ஒரு நல்ல தமிழ்ப் பெயர்சொல்லும்படியாகக் கேட்டுக் கொண்டு, கடிதத்தை உறையிலே போட்டு ஒட்டி, ''பெர்சனல்'' எனக் குறிப்பிட்டுக் கோட்டையிலே பிரதம மந்திரிக்கு அனுப்பி விட்டார்!

மறுநாட் காலையில் தீபன் ரேடியோ நிலையத்துக்கு வந்த போது, அவருடைய மேஜையின் மீது பிரதம மந்திரி அலுவலகத்தின் முத்திரையோடு ஓர் உறை இருந்தது! அவசரம் அவசரமாக அதை உடைத்துப் பார்த்தார் 'தீபன்!'

''உங்கள் பத்திரிகைக்கு 'வானொலி' என்று பெயரிடலாம். ரேடியோவுக்குமே உங்கள் அறிவிப்புக்களில் 'வானொலி' என்பதையும் சேர்த்துப் பயன்படுத்தலாம். மேலதிகாரிகளைக் கலந்து முடிவுசெய்யுங்கள்!''

இவ்வாறு பொருள்பட எழுதியிருந்தார், சென்னை மாகாணத்தின் அன்றையப் பிரதம மந்திரி ராஜாஜி!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



எரிக்லியோ வளர்த்து வந்த நாய் டக்கர். இது பக்கத்து வீட்டு நாயான ''லியோ'' வுடன் சண்டையிட்டு அதை கொன்று விட்டது. இது சம்பந்தமாக அமெரிக்க கோர்ட்டில் ''கொலை வழக்கு'' விசாரணை நடைபெற்றது. டக்கரின் விடுதலைக்கு அதன் எஜமானர் எரிக்லியோ 20 ஆயிரம் டாலர் வரையிலும்செலவழித்துள்ளார். வழக்கு சுப்ரீம் கோர்ட் வரை போயிருக்கிறது!

—கமுதி திராவிடமணி.

● ● ●

இப்போதெல்லாம் சென்னை நகரத்தில் நடக்கிற மாலை நேரக் கூட்டங்களுக்கு, நிகழ்ச்சிகளுக்குப் போவது என்றால், ஒரு தடவைக்கு இரண்டு தடவை மூன்று தடவை யோசிக்க வேண்டியிருக்கிறது! அதிலும் மதிப்புக்குரிய தமிழக அமைச்சர்களிலே சிலருடைய பெயரை நிகழ்ச்சி நிரலிலே பார்த்தால், மூன்று தடவை என்ன, முந்நூறு தடவை யோசிக்க வேண்டியிருக்கிறது! முக்கியமாகப் பல்லவ வேந்தனை நம்பியே உயிர் வாழ்கிற சென்னை வாசிகள் தயங்கித் தயங்கித்தான் போகவேண்டிய நிலை!

குறித்த நேரத்தில் நிகழ்ச்சி தொடங்க வேண்டுமே என்பது முதலாவது கவலை! அப்படியே ஒரு வேளை தொடங்கி விட்டாலுங்கூட, பல்லவன் படுக்கப் போகும் முன்பு நிகழ்ச்சிகள் முடிய வேண்டுமே என்பது அடுத்த கவலை. இது முதலாவது கவலையை விட மேலும் முக்கியமான கவலை! முடிவான கவலை!

சிறப்புரை என்றால் ஒரு மணி ஒன்றரை மணிக்குக் குறையாமல் 'பேசியாக வேண்டும்' என்று திருவள்ளுவருடைய தமிழ் மறையிலே சொல்லியிருக்கிறதா என்ன?

எத்தனை சுவையான பேச்சானாலும், வயிற்றிலே பசியும், காதிலே பல்லவனுடைய குழலுமாகக் கூட்டத்திலே உட்கார்ந்திருக்கிற சென்னைவாசி, நமது அனுதாபத்துக்கு உரியவரே அல்லவா!



# பொன்னுன முதலாண்டின் வெற்றி

# N.S.K.

## சிட் ஃபண்ட்ஸ் (பி) லிமிடெட்

அன்புமிக்க வாடிக்கையாளர்களும், பொது மக்களும் இன்று எங்களது முதலாண்டு நிறைவு விழாவிற்கு வருகை தந்து விழாவை சிறப்பிக்க வேண்டுகின்றோம்.

16.2.84 முதல் 29.2.84 வரை சீட்டு சேரும் அங்கத்தினர்களுக்கு சீட்டின் மதிப்பிற்குத் தகுந்தாற் போல் கீழ்க்கண்ட சிறப்புப் பரிசுகளில் ஏதேனும் ஒன்று அன்பளிப்பாக வழங்கப்படும். முதலாண்டு நிறைவு விழாவை முன்னிட்டு இன்று (16.2.84) மட்டும் சேரும் அங்கத்தினர்களுக்கு சிறப்புப் பரிசும் கூடுதலாக் இலவசப் பரிசும் வழங்கப்படும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

சிறப்பு பரிசுகள் :
- சூட்கேஸ் (Chairman model)
- டின்னர் செட் (St. Steel)
- டிபன்கேரியர் (St. Steel)

(இதில் ஏதேனும் ஒன்று)

இம்மாதம் ஆரம்பிக்கும் புதிய குரூப்புகள்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ரூ. | 1,000 | x | மாதங்கள் | 50 | ரூ. | 50,000 |
| ரூ. | 1,000 | x | மாதங்கள் | 25 | ரூ. | 25,000 |
| ரூ. | 500 | x | மாதங்கள் | 50 | ரூ. | 25,000 |
| ரூ. | 500 | x | மாதங்கள் | 20 | ரூ. | 10,000 |
| ரூ. | 250 | x | மாதங்கள் | 40 | ரூ. | 10,000 |
| ரூ. | 200 | x | மாதங்கள் | 50 | ரூ. | 10,000 |
| ரூ. | 250 | x | மாதங்கள் | 20 | ரூ. | 5,000 |
| ரூ. | 125 | x | மாதங்கள் | 40 | ரூ. | 5,000 |
| ரூ. | 100 | x | மாதங்கள் | 50 | ரூ. | 5,000 |

ஏல முறை : பாதுகாப்புத் தொகையுடன் பகிரங்க ஏலம்.

குறிப்பு : (புதிய அங்கத்தினர்களை அறிமுகப்படுத்தும் N.S.K. அங்கத்தினர்களுக்கும், அவர்கள் மூலம் சேரும் எல்லா புதிய அங்கத்தினர்களுக்கும் இந்த சிறப்பு பரிசு உண்டு)

சீட்டுகள் சேர, தொடர்பு கொள்க:

பதிவு & நிர்வாக அலுவலகம்:
எண். 38-8, பர்கிட் ரோடு, (முதல் மாடியில்) (தி.நகர் பேருந்து நிலையம் எதிர் புறம்)
தி.நகர், சென்னை—600 017. போன்: 447135

N.S.K.யிடம் உங்களுடைய சேமிப்பு புரட்சிகரமான மதிப்பைப் பெறுகிறது.



# இந்த வாரம் இந்தி

இரண்டு மணி நேரம் மனம் விட்டுச் சிரிக்கவேண்டுமா? 'ஜானே பீ தோ யாரோ' படம் பாருங்கள். போதும். எந்த உம்மணா மூஞ்சியையும் சிரிக்கவைத்து விடும் சரக்கு இது.

கதை என்ன, கதை என்ன?...

முனிசிபல் கமிஷனர் டி'மெல்லோ இரு காண்ட்ராக்டர்களிடமிருந்து லஞ்சம் வாங்கியே சலுகைகள் பல கொடுக்கிறார். அப்புறம் என்ன? பல மாடிக் கட்டிடங்கள் முதல் பெரிய பெரிய மேம்பாலங்கள் வரை சட்ட திட்டங்களுக்கு புறம்பாகவே உருவாகின்றன.

ஊழல்களை வெட்ட வெளிச்சமாக்குவதையே தொழிலாகக் கொண்ட 'கபர் தார்' பத்திரிகையின் ஆசிரியை ஷோபா இவர்களின் முகத்திரையைக் கிழிக்க வேண்டும் என்று விரும்புகிறாள்.

சிக்குகிறார்களய்யா இரண்டும் சுதிரும்! இவர்கள் தான் பியூட்டி போட்டோ ஸ்டுடியோவைத் திறந்து வைத்துக் கொண்டு பிஸினஸ் இல்லாமல் ஈயோட்டிக் கொண்டிருக்கும் புகைப் படக்காரர்கள். இருகாண்ட்ராக்டர்களின் சதித் திட்டத்தையும் மறைந்தும், மாறு வேஷத்திலும் படம் பிடித்துக்கொள்ளுகிறார்கள். கதை பல சிக்கல்களுடன் மேலே வளர்கிறது. கடைசியில் உண்மை குற்றவாளிகள் பாவம்! பொய்மையே வெல்லும் லஞ்ச ஊழல் மலிந்த இன்றைய சமுதாய சூழ்நிலையை அப்படியே படம் பிடித்துக் காட்டும் சிரிப்புப் படமாக இந்த 'கடையறை' தயாரித்தவர் குந்தன்ஷா என்கிற மகா துணிச்சல் கார இளைஞர். அவருக்கு இந்தப் படம் எடுக்க உதவிய மகாமகா துணிச்சல்காரர்கள் யார் என்று பார்த்தால் —

## 'ஜானே பீ தோ யாரோ'



வெளியிலேயே இருக்க, நிரபராதிகளான இந்த அமெச்சூர் துப்பறியும் நிபுணர்கள்-கம்-போட்டோகிராபர்கள் கம்பி எண்ணிவிட்டு, வெளியே வருகிறார்கள்.

நேஷனல் பிலிம் டெவலப்மென்ட் கார்ப்பரேஷன்! 'காந்தி' படத் தயாரிப்பிற்குப் பிறகு துணிச்சல் வந்து விட்டதோ?

-சாருகேசி

---



சே...... என்ன வாழ்க்கை சார் இது? என் பெண்டாட்டி தினம் பணம் பணம்னு பறக்கறா. முந்தா நாள் இருபது ரூபாய் கேட்டா, நேத்திக்கு முப்பது ரூபாய். இன்னிக்குத் திரும்பவும் நாற்பது ரூபாய் கேட்கறா!

அய்யய்யோ...... அப்படி என்ன தான் செய்யறா பணத்தை வைச்சிண்டு......

எனக்கெப்படித் தெரியும்? நான் தான் எப்பவுமே அவளுக்குப் பணம் கொடுத்தது இடையாதே.

—சத்யன்.

உலகிலேயே மிகப் பெரிய பைபிள் புத்தகம் 'லாஸ் ஏஞ்சல்ஸ்' நகரத்தில் இருக்கிறது. ரப்பர் அச்சுக்களைக் கொண்டு கையாலேயே அச்சடிக்கப்பட்டது. இதன் நீளம் 4 அடி 1 அங்குலம். பருமன் 2 அடி 9 அங்குலம். எடை அரை டன். மொத்தப் பக்கங்கள் 8,044.

உலகிலேயே அதிகமான மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள புத்தகமும், உலகிலேயே அதிகமாக விற்பனையான புத்தகமும், முதன் முதலில் அச்சடிக்கப்பட்ட புத்தகமும் பைபிள்தான்.

ஆதாரம்: இந்துஸ்தான் டைம்ஸ்.

—வி. கோபிநாத்.




# மேரீ அதாலத்

ரஜினிகாந்த் முரடர்களை முட்டி மோதும் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர். அந்த இன்ஸ்பெக்டருக்கு ஒரே உறவாய் மிக அருமையான தங்கை. அவள்மேல் அவருக்குக் கொள்ளைப்பிரியம். பாசம் இத்யாதி.

அந்தத் தங்கையால் உதாசீனப்படுத்தப்படுகிற மிகப் பணம் படைத்த புள்ளியின் வாலிப மகன். கதை என்னவென்று இதற்கு மேலும் உங்களால் ஊகிக்க முடியவில்லை என்றால் உங்களைத் தாராளமாய் நாடு கடத்தலாம்.

கிழட்டு ஜீனத் தான் ரஜினியின் ஜோடி (?).



காமிராவோடு அலையும் பத்திரிகை நிருபர். தொழில் தவிர மற்ற எல்லாம் செய்கிறார். மாதிரிக்கு:

உடம்போடு ஒட்டுகிற துணியுடன் ஜோர் மழையில் ரஜினியுடன் நனைந்து கொண்டே டூயட் பாடுகிறார்; வில்லன்களைத் திசை திருப்ப கிளப்பில் டான்ஸ் ஆடுகிறார்.

தங்கையைக் கற்பழித்துக் கொன்றவனது தலைமுடி போலீஸுக்குக் கிடைக்க, சந்தேகத்துக்குரியவில்லனின் முடியைப் பறித்துச் சோதனைக்கு எடுத்துச் செல்ல இன்ஸ்பெக்டர் என்ன செய்வார்? அஃப்கோர்ஸ் தாடியுடன் ஒரு டிஸ்கோ டான்ஸ் ஆடி ஒற்றை முடியைப் பிடுங்குவார். பிடுங்குகிறார்.

ரஜினி, ஹிந்திப்படம், என்றால் அக்கறை அதிகம் செலுத்துகிறார் என்பதற்குச் சாட்சியாய் நவீனமான நடன மூவ்மெண்ட்ஸ். நிறைய கறுகறுசண்டைகள். (நம்ம ஜூடோ ரத்தினம் தான் பயிற்சி.)

ஆனாலும் கூட படம் முழுக்க ரஜினியை நிரப்ப வடக்கே கொஞ்சம் தயங்குகிறாற்போல இருக்கிறது. இயற்கைக் காட்சிகள், மனசில் நிற்காதபாடல்கள் என்றும் வேறு ஜோடிகளின் ஆட்டபாட்டங்கள் என்றும் இடைஇடையே செருகிவிடுகிறார்கள். வடக்கில் பெரிய ஹிட்டாம்.

இங்கே—
பார்ப்போமே.

—ஜெயமன்மதன்







○ பாக்கியம்

○ ராஜ சௌந்திரன், ஈரோடு10

? நகைச்சுவை எழுத்தாளர்களைப் பற்றிக் குறிப்பிடும் போது சாவி, நாடோடி, கல்கி, துமிலன் ஆகிய முன்னோடிகளைச் சொல்லாதது மன்னிக்க முடியாத குற்றம் அல்லவா?

! கேள்வி தற்போதைய எழுத்தாளர்களைப்பற்றி, முன்னோடிகளைப் பற்றியதல்ல.

? அதுதான் போகட்டுமென்றால் குமுதத்தின் பாக்கியம் என்று ரா. கி. ரவைக்குறிப்பிடுகிறீரே, ஜ. ரா. சு. அல்லவா அது?

! 'அவரும் குமுதத்தின் பாக்கியம்' என்று இருவரையுமே வளைத்துப் போட்டுச் சுருக்கமாய் எழுதியிருந்தேன். 'உம்' விருதிவிட்டுப்போயிற்று. ப்ரூப் சரியாய்ப் பார்க்காதது தப்புத்தான்.

○ என். சண்முகம், உள்ளி.

? ஐம்பது ரூபாய் லஞ்சம் வாங்கும் அரசு ஊழியரைத் தண்டிக்கும் சட்டம் இலட்சம் இலட்சமாய் லஞ்சம் வாங்கும் அரசியல்வாதியை ஒன்றும் செய்யவில்லையே, ஏன்?

! அது அவரவர் சாமர்த்தியத்தைப் பொறுத்த விஷயம். ஐம்பது ரூபாய் தான் வாங்கினார் என்றாலும், அசட்டுத்தனமாக நடந்து கொண்டால் சிக்கித் தவிக்க வேண்டியதுதான். ஐந்து லட்சம் வாங்குகிறவர் கூட அகப்பட்டுக் கொண்டால், ஆபத்துத் தான். அந்துலே இன்னும் தண்டனை பெறவில்லை என்றாலும் சந்தி சிரிக்கிறதல்லவா? ஊழல் விஷயத்தில் சாமர்த்தியமாக எப்படிச் செயல்படுவது என்று ராஜீவ் கற்றுத் தருகிறார், பாருங்கள்:

கொச்சிக்கு வரும் போது இந்தியன் ஏர் லைன்ஸ் விமானத்தில் வந்தார். இதற்கு இ. காங்கிரஸ் பணம் தந்திருக்க வேண்டும்.



○ இளைப்பாறுகிறார்

சரி, திரும்பிப் போக ஓ. சி. யில் விமானப் படையின்விமானத்தைப் பயன்படுத்தினார். இது குறித்து ஆட்சேபணை எழக் கூடாது என்பதற்காக பாதுகாப்புத்துணை அமைச்சர் கே. பி. சிங் தேவ் கொச்சிக்கு வந்தார். பாதுகாப்பு அமைச்சரானதால் அவருக்கு விமானப்படையின் விமானத்தைப் பயன்படுத்த உரிமை உண்டு. அங்கு அவருக்கு ஒரு வேலையும் இல்லை. பாதுகாப்பு நிறுவனங்களைப் பார்வையிடுவதாகப் பாவலா பண்ணி விட்டு ராஜீவ்ன் நிகழ்ச்சிகளெல்லாம் முடியும் வரை இரவு பத்து மணிக்கு மேலும் காத்திருந்து அவரையும் அழைத்துக் கொண்டு புதுதில்லிக்குப் புறப்பட்டார். ராஜீவின் சாமர்த்தியம் யாருக்கு வரும்?

○ ஆர். சுப்பராவ், திருக்கோவிலூர்.

? வைஜயந்திமாலா அரசியலுக்கு வந்துள்ளாரே?

! ஓய்ந்து போன எல்லா சினிமா நட்சத்திரங்களுக்கும் இளைப்பாறுமிடம் இனி அரசியல் தான்!

○ எஸ். எஸ். மணி, திருவனந்தபுரம்.

? பாக்யராஜை வைத்துப் புகழ் தேடும் நிலையிலா எம். ஜி. ஆர். இருக்கிறார்? இதை நீங்கள் கூடவா நம்புகிறீர்கள்?

! நிச்சயமாக. எதிர் அணியில் பாக்யராஜ் புகுந்து விடக் கூடாது என்பதற்காகவாவது எம். ஜி. ஆர். அவரை முன்னெச்சரிக்கையாக வளைத்துப் போட்டே ஆகவேண்டிய நிர்ப்பந்த நிலையில் இருக்கிறார்.

○ ஆர். அப்துல் கலாம், திருச்சி 20.

? இன்றைய டாக்டர் பட்டத்தின் உண்மையான மதிப்பு என்ன?

! கிருஷ்ண ஸ்ரீனிவாஸ் புகழ் உலகப் பல்கலைக் கழகத்தின் டாக்டர் பட்டங்களைக் கேலி செய்தோரில் நானும் ஒருவன் தான். ஆனால் இப்போது அரசியல் காரணங்களுக்காக நமது பல்கலைக் கழகங்கள்வாரி வழங்கும் கௌரவ டாக்டர் பட்டங்களைப் பார்க்கும் போது காசு கொடுத்து வாங்கும் முன்னதே தேவலாம் என்று தோன்றி விட்டது.

○ வி. கோபிநாத், லெட்சு மாங்குடி.

? பாக்யராஜ் பூர்ணிமா தம்பதிகளை வாழ்த்தினீர்களா? தூற்றினீர்களா?

! வாழ்த்தப் போய், அழைக்கப்பட்டு வந்திருந்த விருந்தினரை விலக்கித் தள்ளிய

## மூன்று நாள் அரசு

போலீஸ் அதிகாரியின் அநாகரீகத்தைத் தூற்றித் திரும்பினேன்.

○ எம். அசோகராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? ரகசியத்தை ரகசியமாய் வைத்திருப்பது எப்படி?

! இதில் ருஷ்யர்களைமிஞ்ச யாரும் கிடையாது. ஆந்திரோபோவ் பலவித மான வியாதிகளால் தாக்கப்பட்டு விநாடிக்கு விநாடி மரணத்தை நோக்கிப் பயணப்பட்டுக் கொண்டிருக்கையில் பல வாரு காலமாக ஜல தோஷம் என்றே அறிக்கை விட்டுக் கொண்டிருந்தார்கள். இருதயமும் மூச்சும் நின்ற பின்னர்தான் கோளாறுகளின் பட்டியல் சாண் நீளத்துக்கு வெளியாகிறது!

○ எஸ். ராமநாதன், அருப்புக்கோட்டை.

# துக்கம் அவசியமா?

? ரஷ்ய அதிபர் ஆண்ட்ரோபோவ் மறைவு குறித்து...?

! குடியரசு என்று குறிப்பிட்ட போதிலும் ருஷ்ய அதிபர்கள் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவதில்லை. பலப்பரீட்சை நடத்து ஒருவர் தலைமைப் பதவி ஏற்கிறார். அந்த அளவுக்கு அவர் படிப்படியாக உயர்ந்து உச்சத்துக்கு வரும் போது மிகவும் வயதானவராகி விடுகிறார். நோயுற்றவராகவும் இருக்கிறார். இதனால் குறுகிய காலத்தில் பிரமாதமாக எதையும் சாதிக்க முடியாமல் போகிறது. (விதிவிலக்குகள் உண்டு) ஆந்திரபோவ், கே. ஜி. பி. என்ற ருஷ்ய ஒற்றர் நிறுவனத்தின் தலைவராயிருந்து நாட்டுத் தலைவரானவர், எனவே தென்கொரிய பயணிகள் விமானம் ஒன்று சுடப்பட்டதையும் கடிதம் போட்ட அமெரிக்கச் சிறுமிக்கு ருஷ்யாவில் மாபெரும் வரவேற்புக் கிட்டியதையும் இந்தப் பின்னணியில் புரிந்து கொள்ள முடியும். அணு ஆயுதப் போட்டியைக் குறைக்க அவர் நிறைய முயற்சி எடுத்துக் கொண்டதாக நமது பிரதமர் கூறியுள்ளது உபசாரத்துக்கு அதிகமாக ஏதுமில்லை.

○ ஆர். சிவராஜ், லால்குடி ★

? ருஷ்ய அதிபரின் மரணத்துக்கு மூன்று நாள் அரசு துக்கம் அவசியமா?

! 365 நாளும் தூக்கம் கொண்டாடுகிற அரசு மூன்று நாள் துக்கம் கொண்டாடவேணும் விழித்துக் கொண்டதே என்று நாம் மகிழ வேண்டியதுதான்! அடிக்கடி அசடு வழியும் அ. இ. ரே. வும் டி. வி.யும் ஒரு மாறுதலாகவாவது

○ விட்டுப்போன விருதி



அழுது வடிய ஒரு வாய்ப்பு.

○ ஆர். நாகராஜன், பரசலூர்.

? ஹைதராபாத்தில் பாங்குகாரை வழிமறித்து 21 லட்சத்துக்கு மேல் கொள்ளையடிக்கப்பட்டு விட்டதே?

! அதில் ஒன்றரை லட்சம் தவிர மற்றவை மீட்கப்பட்டு விட்டதே! கொள்ளையரும் சிக்கினரே! சபாஷ், ஆந்திரா போலீஸ்! ஒப்பிடுங்கள், மாத்ரே கொலைகாரர்களை இன்னும் கண்டுபிடிக்க முடியாத ஸ்காட்லாண்ட் யார்டை!

○ எஸ். ரவிந்திரன், கடலூர்.

? தனிப்பட்டவர்களைத் தாக்கிப் பேச வேண்டாம் என்று கருணாநிதி தன் கட்சிக்கு வேண்டுகோள் விடுத்திருப்பதன் மர்மம் என்ன?

! இது தெரியாதா? முதலில் தாம் மட்டுமே அப்படி தாக்கிப் பேசலாம் என்று அர்த்தம். அவர் பேசியதைத் தொடர்ந்து மற்றவர்களும் பேசலாம். கோஷம் எழுப்பலாம்.

○ வி. கோபிநாத், லெட்சுமாங்குடி.

? எம். ஜி. ஆர். முதல்வரா புரோக்கரா என்று கலைஞர் தாக்கியிருப்பது பற்றி?

! கலைஞர் என்ற அடைமொழிக்குச் சிறிதும் பொருந்தாத படுமட்டமான, அநாகரீகமான பேச்சு. இதன் காரணமாக இவரது உடன்பிறப்புக்கள் இதைவிடக் கேவலமான வார்த்தைகளைப் பிரயோகித்து முதல்வரைத் தாக்கி பாக்கியராஜ் வீட்டு வாசலில் கோஷமிட்டார்கள். வேதனையாயிருந்தது.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்

ஆர். சிவராஜ்,
40, ஓமக்குளத் தெரு,
லால்குடி 621 601.

○ ஜலதோஷத்தால் மரணம்





## வட்டமேஜை



● 5.2.84 கல்கி இதழில் திருவையாறு ஆராதனை விழா பற்றி உமாபதி வரைந்த ஓவியங்கள் கருத்தைக் கவர்ந்தன. அன்பைச் செலுத்தி அமைதி காத்த போலீஸ் அதிகாரி என்று குறிப்பிடப்பட்டுள்ளவர் தஞ்சை உதவி போலீஸ் சூபரின்டெண்டு பதவி வகிக்கும் திரு. டி. ஆர். கமலநாதன். இசை ரசிகர். செஞ்சொற்செல்வர். இவரால் தஞ்சை நகரம் பெருமை அடைகிறது.

பழமார்னேரி — சுந்தரராமன்.

● 'நகர்வலம்' — வந்த 'சின்ன கொலம்பஸ்' — சொன்ன — சாரி காட்டிய —படக்காட்சிகள் — எல்லாமே ''Arumaiyelum Arumai''!

சென்னை—4. — மயிலை கோபி.



● ''தண்ணீர், தண்ணீர்'' படத்திற்கு நமது அரசு எந்தப் பரிசையும் வழங்காதது மிகவும் வேதனைதான். இருந்தாலும் ''கோமல் சுவாமிநாதன்' அவர்கள் எந்தவித ஆக்ரோஷமும் இன்றி அமைதியோடு அடக்கமாகப் பதில் கூறியதைப் படித்தபோது 'ரசிகர்களின் அன்பும், ஆதரவும், பாராட்டுமே 'தண்ணீர், தண்ணீர்' படத்திற்குக் கிடைத்த மிகப்பெரிய பரிசு' என்று எண்ணிவிட்டார் என்பதையே நமக்கு உணர்த்தியது.

ஈரோடு—10. — மேஜர் தாசன்.



● அரசு அறிவித்த முடிவுகள் அனைத்தும் தேர்வுக் குழுவின் ஒருமனதான முடிவுகள் என்பதைத் தெளிவாகக் குறிப்பிட விரும்புகிறேன். இதில் எத்தகைய அரசியல் பின்னணியும் இல்லை; அதற்கு அவசியமும் இல்லை. தேர்வுக் குழுவில் ஓர் உறுப்பினர் என்ற முறையில் உண்மை நிலையைத் தெளிவுபடுத்தவே இந்த மடல்.

சென்னை—18. — புத்தனேரி சுப்பிரமணியம்.

(நாம் எழுதியதில் உறுதியாக இருக்கிறோம் நமது நிருபர் — ஆ.)

# மதிப்பில்லாத நாணயம்

● சரியாங்கத்தில் ஆட்டு ஆட்டென்று ஆட்டோ அரசியலை ஆட்டிவிட்டிருக்கிறீர்கள். ஒரு போஸ்டராக அல்லது பிட் நோட்டீஸாகப் போட்டு எல்லா ஆட்டோவிலும் ஒட்ட வேண்டிய எழுத்துக்கள்... வரிகள்.....

சென்னை—39. — பால ஞானேஸ்வரன்.

● விபத்தைப் பற்றிய கட்டுரை மனத்தை இருக்கியது.... சாதாரண 'மேன்ஹோல்' விஷயம், பல காலமாக விபத்திற்கு காரணமாய் இருக்கும் விஷயம் கண்காணிக்கப்படாமல் இருப்பதும், அதனால் விபத்துக்கள் ஏற்பட்டுக் கொண்டே இருப்பதும், வருந்தத்தக்கது.

பெங்களூர்—16. — டால்ரிக்ஸ்.

● உங்கள் நிருபரின் அழுத்தமான கேள்விகளுக்குக் கலைஞர் கொடுத்துள்ள ஆழமான பதில்கள் என்னைச் சிந்திக்க வைத்தன. எதிர்க்கட்சிகள் இணைப்பால் நன்மை ஏற்படும் என்ற நம்பிக்கை பிறக்கிறது. கடைசிக் கேள்விக்குக் கலைஞர் கொடுத்துள்ள பதில் சற்று வித்தியாசமானது — சுவையானதும் கூட.

சென்னை—5. — எஸ். சம்பத்குமார்.

● சுபாவின் 'நிலா நிலா ஓடிவா' சிறுகதை வாழ்க்கையின் தத்துவத்தை மனோதத்துவக் கண்ணோட்டத்தில் அளிக்கிறது.

மதுரை—1. — எஸ். முத்துப்பாண்டி.



● நான் கடந்த 30.6.83 அன்று துபாய் செல்வதற்காக பம்பாய் விமான நிலையத்தில் காத்திருந்தேன். அங்கு ஓட்டலில் சாப்பிட நினைத்தேன். ஓட்டல் நிர்வாகி ''டாலர் இருக்கிறதா?'' என்றார். ''இல்லை'' என்றேன். ''அப்படியானால் சாப்பிட எதுவும் கிடையாது'' என்று மறுத்துவிட்டார்.

இந்திய நாணயத்திற்கு வேற்று நாடுகளில் மதிப்பில்லாமல் இருக்கலாம்! நம் நாட்டில் விமான நிலைய ஓட்டலிலேயே மதிப்பில்லையா? மற்றும் இந்திய நாணயச் சட்டத்தின்படி இந்த இந்திய நாணயத்தை ஏற்க மறுப்பது குற்றம் ஆகுமே! அரசு கவனிக்குமா?

பு.ஏ.க. — காவேரி குருவள்ளி

(இக் கடிதம் பரிசு பெறுகிறது)

# சீக்கிரம்! உங்கள் குழந்தையுடைய காயத்தின் சிறந்த பாதுகாப்பிற்கு, உபயோகிப்பீர்

# பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.

**அவனது திறந்த காயத்தில் சிறிது அழுக்கு இருந்தாலும் கூட தொற்றுப் பரவக் கூடும்.**

தொற்றுக்கு எதிராக, திறந்த காயங்களின் பாதுகாப்பிற்கு உலகெங்கிலும் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.

பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள நிருபணமான ஆன்டிசெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலே, காற்றோட்டமளித்து விரைந்தாற்றும் நுண்துளைகள்; ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.






**பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.**

**தொற்றுக்கு எதிரான மிகவும் நம்பகமான பாதுகாப்பு.**

Johnson & Johnson

BAND-AID and JOHNSON & JOHNSON are trademarks of JOHNSON & JOHNSON USA © J&J 82

OBM/9263

IS : 4246



# L P Gas Stoves
# Hallmark

இல்லத்திற்கேற்ற உபகரணங்களில்
உயர்ந்த அந்தஸ்து பெற்றது!



**Deluxe**
2-burner stainless steel gas stove.



**Popular**
2-burner cast iron gas stove with stainless steel spill trays.



**Super**
3-burner stainless steel gas stove.




**NISCHA DEEP ENTERPRISES**
8, Victoria Crescent Egmore, Madras 600 105. Phone: 811403.

NDE.174.83 TM

242 S N Layout
II Street, Cross Cut Road
Tatabad
COIMBATORE 641 012

2 Nanjappa Road
Shanthi Nagar
Bangalore 560 027
Phone: 22 78 48

6-1-67/19 Saifabad,
Hyderabad-500 004
Phone: 36719

29-4-17 Kothandarami
Reddy Road
Arundalpet (Eluru Road)
VIJAYAWADA 520 002





# தாலி கட்ட மறக்கலாமா?

● 'கல்யாண மும்முரத்தில் தாலி கட்ட மறந்து போச்சு' என்று சொல்வார்கள். ஆனால் இது தவறு: கல்யாணத்தின் போது ஏன் — எப்படித் தாலி கட்ட மறப்பார்கள்? தாலி கட்டும் முன்பு, தாலியைத் தட்டில்வைத்து எல்லாருக்கும் காட்டுவார்கள். அதைத் தொட்டு அனைவரும் ஆசீர்வதிப்பார்கள். சில சமயம் முகூர்த்த வேளை முடிந்து விடுமோ என்ற அவசரத்தில், இப்படித் தாலியை எல்லோருக்கும் காட்ட மறந்து விடுவார்கள். எனவே பழமொழி கல்யாண மும்முரத்தில் தாலி 'காட்ட' மறந்து போச்சு என்று இருந்து, 'கட்ட' மறந்து போச்சு என்று மருவி இருக்க வேண்டும்.

—ஒரு கருத்தரங்கில் கேட்டது.

● ''ஆங்கில மருத்துவத்துக்கு அணுவளவும் குறைந்ததில்லை ஆயுர்வேத மருத்துவம். ''ஆயுர்வேதத்தில் எல்லா நோய்களுக்குமே மருந்துண்டு'' என்று கூறும் அறிஞர் ஸ்ரீராமதேசிகன், தமிழில் ஆயுர்வேதம்பற்றி விரிவான நூலொன்றை எழுதி வருகிறார். தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று நூல் வெளியாகி விடுமாம். இந்த ஆயுர்வேத அறிஞருக்கு டானிக் எது தெரியுமா? தமிழக முதல்வர் இவரை நேரில் அழைத்து, இவர் பணியைப் பாராட்டிப் பேசியதுதானாம்.



× டானிக் பெற்றார்

● ரேடியோ, டீ.வி. இவற்றுக்கெல்லாம் தமிழில் வார்த்தைகள் இருக்கின்றன. ஆனால் வீடியோவுக்குத் தமிழில் என்ன? அவ்வை நடராஜன் கண்டுபிடித்திருக்கும் சொல், ''காணொளி''.

● இரண்டு பேர் அன்பால், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழ்வது ஒரு பால். அது காமத்துப் பால். இந்த வட்டம் இன்னும் சற்றுப் பெரிதானால் அவர்கள் வாழ வழிகாட்டுவது ஒரு பால். அது அறத்துப்பால். இதுவே மிகப் பெரிதாகி முழுசமுதாயத்துக்கும் வழிகாட்டுவது ஒரு பால். அது பொருட்பால். இப்படி முப்பால் பற்றிப் பேசியவர் போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால்.



× முப்பாலை விளக்கினார்

● அப்பன் எப்படி இருக்கிறானோ, மகனும் அப்படித்தான் இருப்பான். ஒரு பையனை ஒன்று, இரண்டு சொல்லச் சொன்ன போது, அவன் எட்டு, ஒன்பது, பத்து வரை சரியாகச் சொன்னவன், தொடர்ந்து சொன்னான் இட், குயீன், ராஜா... ஏன்? அவன் அப்பன் சதா சீட்டு விளையாடுபவன். — டாக்டர் இரா. ஜனார்த்தனம் ஒரு விழாவில் சொன்னது.



× உதாரணம் காட்டுகிறார்

● முழுக்க முழுக்கப்பெண்களால் நடத்தப்படுகிற (பெண்களுக்காக?) விஷயங்களின் லிஸ்டில் லேட்டஸ்ட் சேர்க்கை நிருத்யரங்கா. இது சபா. இவர்கள் 12 நாள் நாட்டிய விழாவுக்கு ஏற்பாடு செய்தார்கள். சபாஷ்! [இந்த இடத்தில் ஒரு கிசுகிசு: ஒருநாள் நடனம் நடிகை கலக்ஷ்மணனின் குச்சுப்புடி (நடனம் நன்றாய் இருந்தது) ஆனால் அவருடைய குரு நாட்டியத்துக்கு வரவில்லையாமே! ஷிஷ்யைக்கும்-குருவுக்கும் ஏதோ லடாயாமே]?

○ குருவிடம் மனஸ்தாபம்



—சின்ன கொலம்பஸ்

# மால்டோவா சீரணி—
# அவர்களது குறும்புகள் வெகு நளினம்
# அதை நீங்கள் எண்ணுதல் வெகு கடினம்!



மால்டோவா பருகும் குழந்தைகள்—பள்ளியிலும், விளையாட்டிலும்—வாழ்வின் ஒவ்வொரு கணத்தையும் ரசிப்பவர்கள். காரணம்—அவர்கள் பருகும் மால்டோவா...பாலுக்குச் சுவை கூட்டி பன்மடங்கு பலனையும் அளிப்பது.

**சூரிய வெப்பத்தால் முதிர்ந்த கோதுமை, பார்லி மால்ட்**

பஞ்சாபிலிருந்து வரும் கோதுமையும் பார்லியும் மால்டோவா தொழிற்சாலையில் போஷாக்குத் தரும் மால்ட்டாக மாறுகின்றன. அவசியமான தாது உப்புக்களும் வைட்டமின் Bயும் நிறைந்த, நவீன தயாரிப்பு முறையில் உருவான, மால்டோவா அதன் சத்துக்கள் உடலில் எளிதில் கலந்துவிடும் பானமாகிறது.



**தூய, முழுமையான பால்**

எங்கள் பால் சேகரிக்கும் நிலையங்களில், மால்டோவா தயாரிக்கப் பயன்படும் பால் 100% தூய்மையானது. 100% போஷாக்கு நிறைந்தது.

**சுவை கூட்டும் கோக்கோ**

மால்டோவாவில் தரத்தி லுயர்ந்த வெளி நாட்டுக் கோக்கோ சேர்கிறது. அதன் சீரிய சுவையும், போஷாக்கும் உங்களுக்கு புத்துணர்ச்சி யளித்து இன்பமுறச் செய்கிறது.



**சக்தி தரும் சர்க்கரை**

உயர்தரமான வெண்மையான சர்க்கரை சேர்ந்து மால்டோவா...தேர்ந்தெடுத்த இன்னமுதம்...சின்னக் குழந்தைகளுக்கு அதிகச் சக்தி தரத் தேவையான ஆரமுதம்.

**வைட்டமின்களின் விசேஷச் சேர்க்கை**

புரதம், கார்போஹைடிரேட்டுகள், வைட்டமின்கள், தாது உப்புக்கள் அனைத்தும் இணைந்த ஈடிணையற்ற படைப்பு மால்டோவா. வைட்டமின் A, நயாசின், வைட்டமின் $B_1$, வைட்டமின் $D_2$ இவற்றின் விசேஷச் சேர்க்கை கூடியது. செயற்கைச் சுவையெதுவும் கிடையாது.






JIL ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

Monde (உலக) தரத்தேர்வில் தங்கமெடல் பெற்றது 1981, 1982



## வைட்டமின்கள் கூடிய மால்டோவா:
## ஆரோக்கியம், பலம் மற்றும் சக்திக்கு

SIMOES/JIL/1/83 TM




எங்கு பார்த்தாலும் வண்ணத் தோரணங்கள். சீருடையணிந்த மாணவ—மாணவிகள். பிரும்மாண்டமான பந்தல். அழகான மேடை —அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது பொள்ளாச்சியில் நல்ல முத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி.

ஏன்?

அவர்களுக்கு வெள்ளி விழா ஆண்டு இது. அதற்குத்தான் இவ்வளவும்.

• • •

விழாவுக்குச் சென்றிருந்தபோது பார்த்த, கேட்ட, அறிந்த, ரசித்த விஷயங்களின் தொகுப்பு:

# பொலிகிறது பொள்ளாச்சி!

தொடக்க விழாவுக்கு கேரள கவர்னர் நம்மவர் பா. ராமச்சந்திரன் வந்தார். பா. ரா. வந்ததும், நாதகரத்தில் தேசிய கீதம் வாசித்தனர். ரொம்ப ரொம்பப் புதுமை. ஆனால் ஒரு சிறுகுறை: எதற்கும், முன்னாலேயே ஒரு முறை ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கலாம்.

காந்தி கிராம பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் அறம் சொன்னது: ''நான் இம்பாலில் இருந்தபோது, ஒரு மாணவர் 'இப்போதெல்லாம் வெறும் பி. ஏ. வால் பலனில்லை. கூடவே சி. ஏ. வும் இருந்தால் தான் வேலை' என்றார். நான் ஒன்றும் புரியாமல் விளக்கம் கேட்டபோது அவர் சொன்னது: ''சி. ஏ. என்றால் Corruption Allowance லஞ்சஅலவன்ஸ்.

வெள்ளி விழாமலர் வெளியீட்டுப் பேசுகையில், ''எனக்குப்பேச தலைப்பேதும் தரவில்லை. பெண்களுக்குத்தானே வேண்டும் தலை—ப்—பூ. நான்தான் ஆணாயிற்றே அதுதான் தலைப்பு தரவில்லையோ'' என்று சிலேடையுடன் பேச்சைத் துவக்கினார் வலம்புரிஜான்.

பொள்ளாச்சி வள்ளல் மகாலிங்கத்துக்கு பாராட்டு விழா. சிலம்பொலி செல்லப்பன் சொன்னார்: மனோரஞ்சிதம் ஒரு அற்புதமான மலர். எந்த மலரை நினைத்துக் கொண்டு அதனை முகர்ந்தாலும், அது அந்த வாசனையைத் தரும். நம் மகாலிங்கமும் ஒரு மனோரஞ்சித மலர்தான். அவரை அருட்செல்வர், தேசியவாதி தொழிலதிபர், சிந்தனைவாதி, சன்மார்க்க சித்தர், எழுத்தாளர் என்று எந்தக் கோணத்தில் பார்த்தாலும் அந்தக் கோணத்தில் சுடர் விடுவார்.

பாராட்டுக்களுக்கு ஏற்புரை வழங்கிய நா. ம. வேட்டார்: மாணவர்கள் கல்லூரியிலும், வெளியிலும் மாணவர்களாகத் தான் இருக்க வேண்டும். ஆனால் இன்று மாணவர்கள் அரசியல்வாதிகளின் சம்பளமில்லாத வேலையாட்களாக இருக்கிற நிலை. இதை மாற்றியமைக்க வேண்டியது உங்கள் கடமையல்லவா?

வெள்ளி விழாவில் இன்னொரு சபாஷ் சொல்ல வேண்டிய விஷயம் நிகழ்ச்சிகளைக் கவிதை நடையில் தொகுத்து வழங்கிய கோவை வானொலி நிலையத்தின் திரு. கமல் மற்றும் திருமதி திரிபுரசுந்தரிகமல். அனைவரும் ரொம்பரசித்தார்கள்.

வெள்ளிவிழாவின் ஒரு பகுதியாகக் கண்காட்சி. தாவரவியல் துறையில் பல்வேறு விதமான காய்கறிகளைக் கொண்டு அழகான மனிதனை அமைத்திருந்தார்கள். அமெரிக்காவில் உலகிலேயே மிக அதிக அகலமான மரம் இருக்கிறதாம். அதைக் குடைந்து ரோடு போட்டிருக்கிறார்களாம். அதைப் பத்திரிகையில் படித்துவிட்டு; அதைப் போல ஒரு மாடலை உருவாக்கியிருந்தனர். பாரதியின் கவிதை வரிகளுக்குப் பொருத்தமாக ஓவியங்கள் தீட்டியிருந்தனர் (புதுமைப் பெண் என்ற ஓவியத்தில் இருந்த பெண்மணிக்கு, ஜெ. லலிதா சாயல் அடித்ததே!)

• • •

இதுவரை பார்த்தது விழாவைப்பற்றி. இனி கல்லூரியைப் பற்றி:

படம்: பந்தல் அலங்காரம்: மாணவர் தலைவர் சிங்காரவடிவேலு : நா. மகாலிங்கம்:

பாரதியார் பல்கலைக்கழகத்தில் உள்ள 33 கல்லூரிகளிலும் பொள்ளாச்சி என். ஜி. எம். கல்லூரிதான் ரிசல்ட்களில் முதல் இடமாம். சுமார் 1100 மாணவ, மாணவிகள்.

மாணவர்களுக்கு இலக்கிய ஆர்வம் அதிகம். நிறைய கையெழுத்துப் பத்திரிகைகள் நடத்துகிறார்கள். இந்த வருடத்து சிறந்த பத்திரிகை 'இதழ்கள்'. இதன் தயாரிப்புக்காகப் பரிசும், பாராட்டும் தாவரவியல் துறைக்கு (பெயர் பொருத்தத்தைக் கவனித்தீர்களா?) ஆசிரியர் அசோகன்.

1957-ல் 1200 புத்தகங்களுடன் ஆரம்பித்த நூலகம் இன்று 27000 புத்தகங்களுடன் பிரம்மாண்டமானதாய் வளர்ந்து, 12 லட்சம் செலவில் புதுமனை புகவிருக்கிறது இந்த வெள்ளிவிழா சமயத்தில்.

மாணவர் தலைவர் சிங்கார வடிவேலு சொன்னார்: ''இந்த வருடத்தில் நாங்கள் ஸ்டிரைக்கே செய்யவில்லை. (இலங்கைப் பிரச்சினை விதிவிலக்கு) என்றால் நாங்கள் எவ்வளவு நல்ல மாணவர்கள் என்று நீங்களே பார்த்துக் கொள்ளுங்களேன்.''

தமிழக அமைச்சர் குழந்தைவேலு இக்கல்லூரியின் முந்நாள் மாணவர். வெ. விழாவில் கலந்து கொள்வதாய் இருந்தார். ரஷ்ய அதிபர் கலந்து கொள்ள முடியாமல் செய்து விட்டார். அமைச்சருக்கு இரட்டிப்பு வருத்தம்!

தொகுப்பு:

—எஸ். சந்திரமௌலி

---

# வாரம் ஒரு புத்தகம்

## அருளை உணர்த்தும் அற்புதங்கள்!

நம்பிக்கை என்பது அற்புதங்களை நிகழ்த்தக் கூடியது. சுயநம்பிக்கை நாம் சாதனைகளைப் புரிய உதவுகிறது. நமது வணக்கத்துக்கும் பக்திக்கும் உரியவர்களிடம் நாம் வைக்கும் நம்பிக்கை அவர்கள் அற்புதங்களை நிகழ்த்தக் காரணமாகிறது. பொள்ளாச்சி திரு. நா. மகாலிங்கம் இந்த நூலாசிரியர் திரு. பகீரதன் போன்ற பலர் திருவலம் சுவாமிகளிடம் அபாரமாக நம்பிக்கை வைக்கிறார்கள். அற்புதங்கள் நிகழ்கின்றன:

● காரணம்பட்டு கிராமத்தைச் சேர்ந்த சின்னையா சிறு வயதிலேயே திருத்தணியில் முருகன் அருள் பெற்றுத் துறவறம் மேற்கொள்வதுடன் அன்னை பராசக்தி கையால் உணவு பெற்று ஞானம் அடைகிறார்.

● திருவலம் சிவாலயத் திருப்பணியை அவர் நடத்தி வைக்கும் போது ஒருநாள் இரவு சீறிப் படமெடுக்கும் பாம்பை அருள் பார்வையால் அடக்குகிறார்.

● திருவலத்தில் தங்கியிருந்து பக்தர்களின் தீராத நோய்களைத் தீர்க்கிறார். ஏ.கே.சி. நடராஜனின் தங்கைக்கு வந்த புற்றுநோய் மாயமாய் மறைகிறது!

● கொட்டையூரைச் சேர்ந்த முனிலட்சுமி இல்லறத்துடன் ஆடைகளையும் துறந்து அல்லூர் சிவன் கோயில் லிங்கத்தைக் தஞ்சமடைந்தபோது திருப்பதி பொன்.பரமகுரு மூலம் மஞ்சள் புடைவை கொடுத்து அனுப்பி அருள் தேடுவதிலும் ஒருமுறை இருக்க வேண்டும் என்று உணர்த்தி உய்விக்கிறார்.

● பொள்ளாச்சி அருள் மாரி அம்மன் கோயிலில் இருந்து வந்த உயிர்பலி வழக்கத்தைக் தடுத்து நிறுத்துகிறார்.

● அம்முண்டியும் இராணிப்பேட்டையும் பெரிய தொழில் நகரங்களாகும் என்ற இந்த ஞானியின் வாக்கு பலிக்கிறது.

இப்படிப் பலப்பல அற்புதங்களைப் பக்தர்கள் பொன். பரமகுருவின் அணிந்துரையிலும் நா. மகாலிங்கத்தின் முன்னுரையிலுமே காண்கிறோம் என்றால் பகீரதன் எழுதியுள்ள 500 பக்க வரலாற்றில் எத்தனை எத்தனை இடம் பெற்றிருக்கும் என்பதை எளிதில் ஊகிக்கலாம். அத்தனையும் திருவலம் சுவாமிகளின் அருளையும் இறைப் பணிகளையும் சுயநலமற்ற சமுதாயச் சேவைகளையும் கூடத்தையும் விளக்குபவை.

அறுபது வயது பூர்த்தியான நூலாசிரியரின் வாழ்க்கை வரலாறும் கல்பனா எழுத 'இலவச இணைப்பாக' இந்நூலில் இடம் பெறுகிறது! திரு. பகீரதன் மணிவிழா கொண்டாடவில்லை. அதற்குப் பதில் ''திருவலத்துத் தீபம்'' எழுதி வெளியிட்டு மகிழ்கிறார். இந்த நூலின் மூலம் கிடைக்கும் வருவாயெல்லாம் இதைப் பிரசுரித்துள்ள கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலத்துக்கே [வேதாரண்யம் - 614 810] உரிமையாக்குகிறார். விலை ரூ: 35



## செய்தியில் இவர்

# கலை, கல்வி, காருண்யம்



கலாக்ஷேத்திரத்தில் ராமாயண நாட்டிய நாடகம். கைகேயியாக நடித்த ஜெயஸ்ரீ பாத்திரத்தோடு ஒன்றிப் போயிருந்தார். நிகழ்ச்சி முடிந்ததும் முன் வரிசையில் அமர்ந்திருந்த ருக்மிணி தேவி விரைந்து தம் கழுத்தில் இருந்த பவழ ஹாரத்தைக் கழற்றி எல்லோர் முன்னிலையிலும் ஜெயஸ்ரீயின் கழுத்தில் போட்டு அக்கலைஞரை மெய் சிலிர்க்க வைத்தார்.

தக்க சமயத்தில் பாராட்டும் பண்புடைய ருக்மிணி தேவி தம் மனத்தில் தவறென்று பட்டதை ஒளிவு மறைவின்றிச் சொல்லவும் சற்றும் தயங்கியதில்லை. ஒரு முறை கலைஞர்கள் குழு ஒன்று தம்மில் ஒருவருக்கே ஒரு தேசிய விருதை வழங்க வேண்டும் என்று தீர்மானித்தது. அக்குழுவின் உறுப்பினராய் இருந்த ருக்மிணி தேவி உடனே நமக்கு நாமே பட்டம் கொடுத்துக் கொள்வதா என்று எதிர்ப்புத் தெரிவித்தார். இதனால் பலர் நல்லுறவை அவர் இழக்க நேர்ந்தும் அவர் துளியும் கலங்கவில்லை.

நாடாளுமன்றத்தில் பிராணி ஹிம்சையை எதிர்க்கும் சட்டங்களைக் கொண்டு வரத் தீவிரமாக முயன்று கொண்டிருந்தார் ருக்மிணி தேவி. எல்லா உறுப்பினர்களும் "மனிதனின் கஷ்டமே தீர்ந்தபாடில்லை, நீங்கள் அதற்குள் விலங்குகளுக்காக வக்காலத்து வாங்குகிறீர்களே!" என்று பரிகசித்தனர். அப்போது "வாயுள்ள மனிதர்களுக்காகப் போராட இவ்வளவு பேர் இருக்கும்போது, வாயில்லா ஜீவன்களுக்காக நான் ஒருத்தியாவது வேண்டாமா?" என்றார். அரசாங்கமே அவர் விரும்பிய மசோதாவை நாடாளுமன்றத்துக்குக் கொணர்ந்து நிறைவேற்றி வைத்தது.

அஹிம்சை வழி அழகு;
அச்சமளிக்காத கல்வி முறை;
விரசம் இல்லாத கலைநயம்

இவை மூன்றும் ருக்மிணி தேவியின் தீவிரமான கொள்கைகள். ஜீவ காருண்யத்தை அயல் நாடுகளிலும் போதித்தார் அவர். அயல் நாட்டுப் பெண்மணிகள் விரும்பி உபயோகித்த அழகுச் சாதனங்கள் பலவற்றில் விலங்குகளின் கொழுப்புச் சத்துக் கலந்திருந்தது. 'மிங்க்' என்ற பிராணியைக் கொன்று அதன் ரோமத்தைக் கொண்டு தயாரித்த கோட்டுகள் மிகப் பிரசித்தி. ருக்மிணி தேவியின் சேவையால் இந்த ஜீவஹிம்சைகள் பெருமளவிற்குக் குறைந்து விட்டன.

பரீட்சைகளும் போதனைகளும் ஒருவரைக் கல்விமானாக்க முடியாது. புலன்களால் உணர்ந்து கற்பதே சிறந்த கல்வி முறை என்பது மரியா மான்டிஸோரியின் கருத்து. மான்டிஸோரி அம்மையாரை இந்தியாவுக்கு வரவழைத்துப் பல இந்தியர்களை அவரிடம் பயிற்சி பெறச் செய்தார் ருக்மிணி தேவி. இந்தியாவின் முதல் மான்டிஸோரி பள்ளி இவர் நிறுவியது தான்.

ஏற்கெனவே பல பட்டங்களையும் விருதுகளையும் பெற்றுள்ள ருக்மிணி தேவிக்கு இவ்வாண்டு காளிதாஸர் பரிசை வழங்கியது மத்தியப் பிரதேச மாநில அரசு. மிகச் சிறந்த கலைப்பணிக்காக இப்பரிசைப் பெறுகிறார்.

சில வருடங்களுக்கு முன் திருமதி லக்ஷ்மி தேவதாஸ் காந்தியை கலாக்ஷேத்திராவில் "கீத கோவிந்தம்" நாட்டிய நாடகத்தைப் பார்க்க அழைத்தார் ஒருவர். சிருங்கார ரஸம் ததும்பும் அந்தக் காவியத்தை, நாட்டிய நாடகமாக்கினால் காணச் சகியாது என்று திருமதி தேவதாஸ் காந்தி வர மறுத்துவிட்டார். பலமுறை வற்புறுத்திய பிறகு அரைமனத்துடன் வந்து அமர்ந்தார். கீத கோவிந்தத்தை முழுவதும் பார்த்து மனமுவந்து பாராட்டினார். அங்க அசைவுகளால் ரசமானதை வெகு எளிதில் விரசமாக்கிவிட முடியும்; இதனால் அசைவுகள் எப்போதும் வெகு சுத்தமாக இருக்க வேண்டும் என்பதில் மிகவும் கண்டிப்பாக இருப்பார் ருக்மிணி தேவி.

நேர்மை, அன்பு, அறிவு, அழகுணர்ச்சி – இவற்றின் வடிவமாய் விளங்கும் திருமதி ருக்மிணி தேவிக்கு, ஃபிப்ரவரி 29 அன்று 80 வயது பூர்த்தியாகிறது. மூன்று தலைமுறைக் கலைஞர்களையும், கலையையும் வளர்த்து வந்திருக்கிறார். நாலு ஆண்டுகளுக்கு ஒரு முறை பிறந்த நாள்கொண்டாடுவதால் தானோ என்னவோ இவர் இன்றும் ஆர்வமும் சுறுசுறுப்பும் குன்றாமல் காணப்படுகிறார். இந்தப் பண்பாட்டுக் காவலரின் பணி மேன்மேலும் சிறக்க வாழ்த்துவோம்.

தகவல்: வசந்தா

தொகுப்பு: சிதாரவி

# குள்ள மணிக்குக் கல்யாணம்

தேனாம்பேட்டை எல்டாம்ஸ் ரோடில் ஒரு புராதன வீடு. "பேட்டி" என்றதும் "வாங்க நம்ம மாடி ரூமுக்குப் போவோம்" என்கிறார், குள்ளமணி.

அறையில் நுழையும் போதே ஒரு அம்மையாரின் படத்தைக் காட்டி, "இவங்க என் குலதெய்வம் மாதிரி. ஜெய்சங்கர் சாரோட அம்மா இவங்க" என்று கும்பிடு போடுகிறார்.

"என் சொந்த ஊர் அரிமளம். நிஜப்பெயர்: சுப்பிரமணி. ஆறும்கிளாஸ் வரை படிச்சேன். சின்ன வயசிலேயிருந்து எனக்கு சினிமா ஆசை.

## ஏறாத கம்பெனியில்லே!

பதினைஞ்சு வயசிலே மெட்ராஸுக்குக் கிளம்பி வந்தேன். சினிமா சான்ஸ் கேட்டு நான் ஏறாத கம்பெனியில்லே. கைப்பணமும் போய் அனாதையாக நின்றேன். வேறு வழியில்லாமல் ஆர்யபவன் ஓட்டலில் டேபிள் கிளீனர் வேலைக்குச் சேர்ந்தேன்.

ஒருநாள் கதாசிரியர் தூயவன் அங்கு டிபன் சாப்பிட வந்தார். அவரிடம் எனது சினிமா ஆசையைச் சொன்னேன். "உனக்கா?" வாய்விட்டுச் சிரித்தார்.

## ஜெய்சங்கர் வீட்டில்!

தூயவன் சார் சிபாரிசின் பேரில் ஜெய்சங்கர் வீட்டில் வேலைக்குச் சேர்ந்தேன். ஜெய் சாரும் அவரது அம்மாவும் என்னை வெறும் எடுபிடி என்று நினைக்காமல் சொந்தப் பிள்ளை போலப் பழகினார்கள்.

ஒருநாள்...

எவர்சில்வர் பக்கெட்டைக் கயிற்றில் கட்டிக் கிணற்றில் தண்ணீர் இழுத்தேன். பளு தாங்காமல் பக்கெட் அறுந்து கிணற்றுக்குள் விழுந்து விட்டது. வேலைக்குச் சேர்ந்த புதிது. எங்கே நமது வேலை போய் விடுமோ என்ற பயம். யோசிக்கவே இல்லை. அடுத்த நிமிடம் கிணற்றுக்குள் பாய்ந்தேன். வீட்டில் அனைவரும் பதறி விட்டார்கள். பக்கெட்டுடன் மேலே ஏறிய போது எனது பற்களில் சில பறிபோயிருந்தன.

## அறிமுகம்

ஜெய் சார் நாடகத்தில் நடிக்கும் போது நான் எனது ஆசையை வெளிப்படுத்தினேன். சில நாடகங்களில் நடித்தேன்.

நான் முதன் முதலில் அறிமுகமாகிய திரைப்படம் நவாப் நாற்காலி. அதில் நாகேஷின் தம்பியாக நடித்தேன். தொடர்ந்து பல வாய்ப்புக்கள்.

## என்னைவிடக் குள்ளன்!

அருணாசலம் ஸ்டுடியோவில் 'பொய் சாட்சி' படப்பிடிப்பில் டைரக்டர் பாக்யராஜுடன் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது தவக்களை (சிட்டிபாபு) அங்கே வந்தான். டைரக்டரிடம் சான்ஸ் கேட்டான்.

நான் ஆவேசப்பட்டு திட்டினேன். "கடவுளே நானே மூன்றரை அடி உயரம். நீ ஏன் என்னை [illegible] வந்தேன். இவன் (தவக்களை) இரண்டடி உயரமிருக்கிறான் பாவம். இவன் என்ன செய்வானோ? சே. ஏன் எங்களை இப்படிக் குள்ளமாகப் படைத்தாய்?"

பாக்கியராஜ் சார், "ஏனப்பா கடவுளைத் திட்டுகிறாய்? வேண்டாம். இவனும் ஒரு காலத்தில் நல்லா வருவான்" என்றார் அசரீரி போல. அவர் சொன்னது போல் அவர் படத்திலேயே (முந்தானை முடிச்சு) அவன் பிரபலமாகி விட்டான். 'பொண்ணு புடிச்சிருக்கு' படத்தில் நாங்கள் இருவரும் சேர்ந்து நடிக்கிறோம்.

## குரங்குக்கு டூப்!

ஸ்ரீதேவி என்ற படத்தில் ஒரு மனிதக் குரங்கு நடித்தது. சில காட்சிகளில் அக்குரங்கின் டூப்பாக நான் நடித்தேன். மேட்டுப்பாளையத்தில் ஒரு பாக்கு மரத்திலிருந்து இன்னொரு பாக்கு மரத்துக்குக் குரங்கைப் போலத் தாவினேன். பிடி நழுவி விட்டது! நல்ல உயரத்திலிருந்து கீழே விழுந்தேன். தலையில் பலத்த அடி! இரண்டு மாதம் ஆஸ்பத்திரியில் தீவிர சிகிச்சை பெற்று உயிர் பிழைத்தேன். புனர் ஜென்மம்தான்.

## கல்யாணம்;

136 படங்களில் நடித்து விட்டேன். எனக்கும் முப்பது வயதாகி விட்டது. வருகிற ஏப்ரல் மாதம் எனக்குக் கல்யாணம். அத்தையின் பெண்ணையே மணக்கிறேன்.

பேட்டி:

பண்ணை சௌரிராஜன்



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

அதிக வருமானம்

ஆயுள் பாதுகாப்பு

விபத்து பாதுகாப்பு

# ULIP

## உங்கள் குடும்ப நலனைக் கருதி நான்கு நன்மைகள் பயக்கும் முதலீட்டுத் திட்டம்

யூனிட் லிங்க்ட் இன்சூரன்ஸ் ப்ளான் (ULIP) பற்றித் தெரிந்து கொள்ள இதுவே சமயம்!

நீங்கள் முதலீடு செய்யும் தொகைக்கு வரிச் சலுகை கிடைக்கிறது. இலக்குத் தொகைக்குச் சமமாக உங்களுக்கு ஆயுள் இன்சூரன்ஸ் பாதுகாப்பு கிடைக்கிறது. மருத்துவ சோதனை தேவையில்லை.

மேலும் ரூ. 15,000 பெறுமான விபத்து இன்சூரன்ஸ் பாதுகாப்பும் உண்டு.

எல்லாவற்றிற்கும் மேலாக, உங்கள் முதலீடு அதிக வருவாயைத் தருகிறது.

ULIP அளிக்கும் நன்மைகளை நீங்களே பாருங்கள்.

| சேமிப்புக் காலம் | ஆண்டுதோறும் செலுத்தவேண்டிய தொகை | இலக்குத் தொகை | முடிவில் பெறும் தொகை |
|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. |
| 10 வருடங்கள் | 1200 | 12,000 | 19,000 |
| 15 வருடங்கள் | 800 | 12,000 | 24,500 |

உங்கள் வயது 18 லிருந்து 45½ வரை இருந்தால் நீங்கள் ULIP திட்டத்தில் சேரலாம். உங்கள் இலக்குத் தொகை குறைந்தபட்சம் ரூ. 3000 ஆகவும் அதிகபட்சம் ரூ. 12,000 ஆகவும் இருக்க வேண்டும். சேமிப்புக் காலம் 10 வருடமோ அல்லது 15 வருடமோ இருக்கலாம். நீங்கள் இத்திட்டத்தில் சேர்ந்த மூன்று வருடத்திற்கு பிறகு ரூ. 12,000 பெறுமானமுள்ள மற்றும் ஒரு ULIP திட்டத்தில் சேரலாம்.

இதர விபரங்களுக்கு எங்கள் ஏஜெண்டுகள், தலைமைப் பிரதிநிதிகள் மற்றும் பாங்க் ஆஃப் பரோடாவின் கிளைகளை அணுகுங்கள்.



## யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

(ஒரு பொதுத் துறை நிதி நிறுவனம்)
தலைமை அலுவலகம் : பம்பாய்.
பிராந்திய செயலகம் : ரெஜினா மான்ஷன்,
46 செகண்ட் லைன் பீச், சென்னை-600 001 போன் : 27433

தமிழ் நாட்டிலுள்ள எங்கள் முக்கிய பிரதிநிதிகள்:

• கோவை, பெரியார், நீலகிரி மாவட்டங்களுக்கு : திரு ஏ. தனபால், 30, ஹூசைன் ரோடு, கோவை-641 018. போன் : 34776 (அலு) • மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களுக்கு : திரு எம். இராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002 போன் : 30160 (அலு) • சேலம் மாவட்டத்திற்கு : திரு என் கே. இங்கர்சால், 155, கவர்னர்ஸ்மில்ஸ் தெரு, அன்னதானப்பட்டி, சேலம்-636 002 போன் : 64302 (வீடு) • தஞ்சை மாவட்டத்திற்கு : திரு கு. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி. நகர், தஞ்சை-613 007 போன் : 1224 (வீடு) • நெல்லை, குமரி மாவட்டங்களுக்கு : திரு எம்.எம். காஜா, பாக்கார் பில்டிங் அனெக்ஸ், 41, திருவனந்தபுரம் நெடுஞ்சாலை, பாளையங்கோட்டை-627 002. போன் : 4520 (அலு). 5395 (வீடு)

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.**

Sista's UTI 152/83 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka


# ஸுப்ரீம். நீராடும் வேளையிலே நிறைவழகு பேணிடும்.




ஸுப்ரீம் குளியல்...முகம் மட்டுமல்ல, மேனி முழுவதும் அழகில் குளித்தெழும். ஏனெனில், செழுமையான பியூட்டி க்ரீம் கொண்டது ஸுப்ரீம்—செறிவான நுரைமூலமே அதனை உணர்ந்திடுவீர். ஸுப்ரீம். மென்மையுடன் நின்று நிலவும் நறுமணம்...குளித்தபின் வெகுநேரம் வீசும் நல்ல வாசம்.




**ஸுப்ரீம்—பியூட்டி க்ரீம் சோப்**

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

HTB-HLL 8485